## க்ளியரெஸில் கொண்டு தினமும் ஹோம்வொர்க் செய்தால் நண்பர்களிடையேயும் ஃபர்ஸ்ட் க்ளாஸ் மதிப்பெண் பெறுவது மிகவும் சுலபம்.



### காரணம் க்ளியரெஸில் சருமம் எனில் அதிகத் தெளிவான சருமம்.

காலேஜில் பிரபலமாக வேண்டுமென்றால் பின்னணியில் இருந்து பிரயோசனம் இல்லை. நாலு பேருக்கிடையே தனித்து விளங்கிட உங்களுக்குத் தேவை அதிகத்தெளிவான உருவம் அதாவது க்ளியரெஸில் சருமம்.

க்ளியரெஸில் பருக்களில் மூன்று வழிகளில் ஆற்றலுடன் செயல்புரிகிறது.

ஒன்று — பருவுக்குள் ஊடுருவிச் செல்கிறது. இரண்டு — கூடுதல் எண்ணெய்ப் பசையை நீக்குகிறது. மூன்று — பருவை காயவைத்துப் போக்குகிறது.

க்ளியரெஸில் பருக்களில் மூன்று வழிகளில் ஆற்றலுடன் செயல்புரிகிறது.



1 பருவுக்குள் ஊடுருவிச் செல்கிறது.



2 கூடுதல் எண்ணெய்ப் பசையை நீக்குகிறது.



3 பருவைக் காயவைத்துப் போக்குகிறது.

பருக்களுக்கு சிகிச்சை அளிப்பதில் க்ளியரெஸில்தான்-உலகிலேயே முதன்மையானது என்பது இதனால் தெள்ளத்தெளிவாகிறது.

க்ளியரெஸில் உபயோகியுங்கள் நண்பர் குழாம் அமைத்துக் கொள்ளுங்கள்.




**பருக்களுக்கு சிகிச்சை அளிப்பதில்**
**உலகிலேயே முதன்மையானது.**

Enterprise/PG/CC/P/2/Tm a

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## உண்மையான அமைதி

எல்லா ஆண்டுகளைப் போல 1991ம் ஆண்டும் நல்லதும் கெட்டதும் கலந்தே ஆரம்பமாகியுள்ளது. நாட்கள் கழியக் கழிய நல்ல அம்சங்கள் மேலும் மேலும் நன்கு உருவாகி வருவதைக் காண்கிறோம். இத்தகைய நல்ல நிகழ்ச்சிகளுக்கும் செயல்களுக்கும் நம் முழு ஆதரவை அளிக்க வேண்டும் எனக் கூறவும் தேவை இல்லையே.

பல ஆண்டுகளாகப் பெரும் கவலையில் ஆழ்ந்திருந்த உலகம் தற்போது இரு வல்லரசுகளான அமெரிக்காவும் ரஷ்யாவும் நட்புறவுடன் நெருங்கி வருவது கண்டு மகிழ்கிறது. இந்த இரு வல்லரசுகளும் போரில் இறங்கி இருந்தால் உலகமே அழிவுப் பாதையில் சென்றிருக்கும். நல்ல வேளையாக இவை நல்லவிதமாய் சிந்தித்து தம் நெடுங்காலப் பகைமையை மறந்து உலகில் அமைதி நிரந்தரமாக நிலவும் வகையில் செயல்பட விரும்புகின்றன.

போர் என்பது மனிதனின் சிந்தனையில்தான் முதலில் தோன்றுகிறது என்றும் பின்னரே அது வெளிப்படையாகத் தெரிந்து இரத்தம் சிந்தும் அளவிற்குப் போய்விடுகிறது என்பதையும் யாவரும் அறிவோம். உலக சமாதானம் ஏற்பட வேண்டுமானால் உள்ளத்தில் அமைதி ஏற்பட வேண்டும் என நடக்கும் இயக்கத்தை நாம் பலப்படுத்த வேண்டும்.

இதனை நாம் செய்வோமாக.

மதிமுகம்: 38 பிப்ரவரி 1991 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ. 3-00 வருட சந்தா: ரூ. 36-00






# தீங்கான பாம்பும் அன்பார்ந்த பட்டையும்




முடியுங்கள்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 49 | [illegible] | 47 | 46 | 45 | 44 | 43 |
| 36 | 37 | 38 | 39 | [illegible] | [illegible] | 42 |
| 35 | 34 | 33 | 32 | 31 | [illegible] | 29 |
| 22 | [illegible] | 24 | 25 | [illegible] | 27 | [illegible] |
| 21 | 20 | 19 | 18 | 17 | 16 | 15 |
| 8 | 9 | 10 | [illegible] | [illegible] | 13 | 14 |
| 7 | 6 | 5 | 4 | 3 | 2 | |









தீங்கான பாம்பின் வாயருகில் சென்றால், அதன் வால்வரை இறங்க வேண்டும்.

ஆனால் அன்பார்ந்த பட்டையின் அடிபாகத்திற்கு சென்றால் அதன் உச்சி வரை ஏறிவிடலாம்.




HTA 2886

# ஜப்பானின் புதிய மன்னர்




பசிபிக் சமுத்திரத்தில் தீவுகள் பல அடங்கிய நாடு ஜப்பான் நாடு. இந்நாட்டில்தான் உலகிலேயே மிகப் பழைமையான முடியரசு இன்னமும் உள்ளது. இந்த அரச வம்சம் கி.மு. 660ல் ஆரம்பமாகியது. இந்நாட்டு மக்கள் தம் மன்னரை தெய்வாம்சம் கொண்டவராகக் கருதுகிறுர்கள்.

பாரத நாட்டிலிருந்து ஜப்பானுக்கு பௌத்த மதம் எப்போதோ சென்றுவிட்டபோதிலும் 19ம் நூற்றுண்டின் மத்திவரை அந்த நாடு அயல் நாடுகளுடன் குறிப்பாக மேற்கத்திய நாடுகளுடன் தொடர்புகள் கொண்டிருக்கவில்லை. ஆனுல் அந்நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டதும் ஜப்ான் ஆசியாக் கண்டத்திலேயே வளமிக்கதாயும் சக்தி வாய்ந்த நாடகவும் ஆகியது.

இரண்டாவது உலகப் போரில் ஜப்பான் ஜெர்மனியின் ஹிட்லர் பக்கம் சேர்ந்து அமெரிக்காவை எதிர்த்தது. ஆரம்பத்தில் அது பல நாடுகளேயும் வென்றது. ஆனுல் போரில் புதிய திருப்பம் ஏற்பட்டு ஜெர்மனியும் அதன் கூட்டாளிகளும் தோல்வி அடைந்தன. 1945 ஆகஸ்ட் 6ந் தேதி முதல் அணுகுண்டை ஹீரோஷிமாவிலும் இரண்டாவது அணுகுண்டை அதே மாதம் 9ந்தேதி

நாகசாகி யிலும் அமெரிக்கா வீசி ஜப்பானில் பயங்கர சேதத்தை விளை வித்தது. இதைக்கண்டு ஜப்பான் மன்னர் தோல்வியை ஒப்புக் கொள் வதாக வானொலி மூலம் கூறித் தமக்கு எவ்வித தெய்வாம்சமும் கிடையாது எனத் தம் நாட்டு மக்களுக்கும் அறிவித்தார்.

அன்று முதல் மன்னரது ஆட்சி பெயரளவில்தான் இருந்து வருகிறது. ஆயினும் தம் மன்னர் தெய்வாம்சம் கொண்டவர் என்பதைக் குறிக்கும் பல சடங்குகளை இன்றும் ஜப்பான் தொடர்ந்து செய்து வருகிறது. முடி யாட்சியை அழிக்க வேண்டுமெனக் கூறும் தீவிரவாதிகள் ஜப்பானில் இருக்கவும் இருக்கிறார்கள்.

மன்னர் ஹீரோ ஹிடோ தம் 87 வது வயதில் 1989 ல் இறந்தார். அவருக்குப் பின் ஐம்பத்தாறு வயதுள்ள அவரது மகன் அகிஹிடோ மன்னரானார். ஆனால் அவரது பட்டாபிஷேகம் 1990 நவம்பரில்தான் நடைபெற்றது.

இரண்டாவது உலகப் போர் முடிந்தபோது ஜப்பான் முழு வதும் நாசமுற்று இருந்தது. ஆனால் இப் போதோ அது எல்லா துறைகளிலும் வெகுவேகமாக மிகவும் முன்னேறி விட்டது. உலகில் ஜப்பான் தொழில் திறமையில் சிறந்து மிக உயர்ந்து நிற்கிறது. ஜப்பானில் பெரும்பா லான ஜப்பானியர் தம் மன்னரை நாட்டின் ஒருமைப்பாட்டின் சின்ன மாகக் கருதுகிறார்கள்.






# நல்லவனே கடவுள்

புதுப்பாளையத்தில் செல்லப்பன் என்ற ஏழைக் குடியானவன் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தான் அவனுக்கு அரை ஏக்கர் நிலம் இருந்தது. அவனுக்குத் தாய், தந்தை இல்லை. முருகன் என்ற அனுதைச் சிறுவனைத் தன்னோடு வைத்துக் கொண்டு அவனைத் தன்மகனைப் போல வளர்த்து வந்தான்.

செல்லப்பன் எல்லோரிடமும் இனிக்கப் பேசுவான். கள்ளம் கபடற்றவன். யார் எதைச் சொன்னாலும் அதனை எதிர்த்துக் கூறவே மாட்டான். அவனை யாராவது முட்டாள் என்று சொன்னாலும் அவன் ஆம் என்று தலையை ஆட்டிச் சிரிப்பான்.

ஒருவருடம் நல்ல மழை பெய்து அவ்வூர் நிலங்களில் எல்லாம். அமோக விளைச்சல் கண்டது. அது கண்டுயாவரும் மகிழ்ந்தனர். செல்லப்பனும் வீட்டுக் கூரையை மாற்றி ஓடுகளாகப் போடலாம் என்றும் முருகனுக்கு நல்ல சட்டை, ஆடைகள் வாங்கி கொடுக்க வேண்டும் என்றெல்லாம் நினைத்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஆனால் மனிதன் மனக்கேட்டை கட்டுவது போல எல்லாம் நடந்தா விடுகிறது? ஒருநாள் பளிச்சென்று துடைத்து விட்டது போல இருந்த வானத்தில் திடீரென கருமேகங்கள் வந்தன. இடியுடன் மழை விடாமல் பெய்தது. அதன் பயனாக ஊரே வெள்ளத்தில் மூழ்கியது. ஒரு ஏரி உடைப்பு எடுத்து நீர் பெருகி மண்ணையும் சேற்றையும் அவ்வூர் வயல்களில் நிரப்பி விட்டது.

அந்த ஊரில் எல்லோருமே இப்படிப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டு விட்டதே என இடிந்து போனார்கள். மணலும் சேறும் ஆங்காங்கே

-பாபநாசம் சாமா-



தண்ணீரும் இருக்கத்தான் இருந்தன. செல்லப்பனின் நிலமும் அப்படித்தான் இருந்தது.

செல்லப்பன் ஆவேசத்தோடு "என்ன அநியாயம்? நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுப் பயிர் செய்ததெல்லாம் பாழாயிற்றே கடவுளே! இதுவா உன் நீதி?" என்று தன் தடியை எடுத்துச் சுழற்றியவாறே ஓடி ஊர் எல்லையிலுள்ள தன் நிலத்தின் வரப்பின் மீது போய் நின்ருன்.

தன்நிலம் அடைந்த அவலநிலையைக் கண்டு அவன் தன் தடியை வேகமாகச் சுழற்றியவாறே "இதோ பார்! இது வரை எனக்குக் கோபமே வந்தது இல்லை. கோபம் வந்தால் நான் என்ன செய்வேன் என்று எனக்குத் தெரியாது. அதனுல் மரியாதையாக இந்த மணல், சேறு, தண்ணீர் எல்லாம் மாயமாய் மறைந்து என் வயல் முன்னைப் போலப் பச்சைப்பசேலென்று பயிர் அறுவடைக்கு தயாராக இருந்தது போலச் செய்ய வேண்டும்" என்று கத்திக் கூறினுன்.

அவ்வளவுதான்! மறுநிமிடம் அவனது நிலத்திலிருந்த மணலும் சேறும் போன இடம் தெரியவில்லை. தண்ணீர் வடிந்து போயிற்று. பயிர் தலைதூக்கி அறுவடைக்குத் தயாராக இருந்தது.

அப்போது செல்லப்பன் "ஆமாம். இப்படித்தான் இருக்க வேண்டும். நான் சொன்னதைக் கேட்டு அதன்படி நடந்துவிட்டாயே. இனி எனக்கு கோபம் வராது. நான் ஒன்றும் செய்யமாட்டேன்." என்ருன்.

இந்த அதிசய சம்பவம் பற்றிய செய்தி கொஞ்ச நேரத்திற்குள் அந்த ஊர்முழுவதும் பரவிவிட்டது. எல்லோரும் "ஆகா! என்ன அதிசயம்! செல்லப்பனுக்கு ஏதோ தெய்வீக சக்தி இருக்கிறது. அதனுல் தான் அவன் சொன்னதும் அவன் வயல் மட்டும் கோர விளைவுகளிலிருந்து தப்பிவிட்டது" என்ருர்கள்.

இந்தச் செய்தி சுற்றுப்புற கிராமங்களுக்கும் பரவி விட்டது. செல்லப்பனையும் அவனது நிலத்தையும் காண மக்கள் கூட்டம் கூட்டமாக தினமும் வரலானுர்கள். அவர்

களும் செல்லப்பனிடம் ஏதோ தெய்வீகசக்தி இருக்கத்தான் இருக்கிறது என்று பேசிக்கொண்டே சென்றுர்கள்.

இந்த அதிசயத்தை அடுத்து மேலும் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. செல்லப்பனின் வளர்ப்பு மகனை முருகன் விளையாடிக் கொண்டிருக்கையில் தவறிப் போய் ஒரு கிணற்றில் விழுந்து விட்டான். அப்போது செல்லப்பன் தன் நிலத்தில் வேலை செய்து கொண்டிருந்தான். தன் மகன் கிணற்றில் விழுந்து விட்டான் என்ற சேதி கேட்டதும் அவன் ஓடோடி அக்கிணற்றருகே வந்தான்.




அவன் கிணற்றைப் பார்த்து அதில் நிறையத் தண்ணீர் இருப்பதைக் கண்டு கோபத்தோடு "என் மகனை பலி வாங்கப் போகும் இந்தக் கிணறு இப்போதே வற்றிப் போகட்டும்" என்று உரக்கக் கூவினுன். மறு நிமிடமே கிணற்று நீர் வற்றி நிலமட்டம் தெரிந்தது. அங்கு எவ்வித அபாயமும் இல்லாமல் முருகன் இருந்தான். அது மட்டுமல்ல அவன் உயர வந்து செல்லப்பனின் கால்களைப் பிடித்துக் கொண்டு விளையாடலானுன்.

கிணற்றைச் சுற்றி நின்ற மக்கள் இந்த அதிசயத்தைக் கண்டு பிரமித்துப் போனுர்கள். செல்லப்பனிடம் ஏதோ ஒரு தெய்வீக சக்தி உள்ளது என்று அவர்கள் உறுதியாக நம்பினுர்கள்.

இந்தத் தடவை செல்லப்பனையும் அந்த வற்றிய கிணற்றையும் பார்க்க மக்கள் கூட்டம் திரண்டு வந்தது. அவர்கள் வெறுங்கையுடன் வராமல், தேங்காய், பழம், தட்சணை என்றெல்லாம் கொண்டு வந்து செல்லப்பன் முன் வைத்து அவனை வணங்கிச் சென்றுர்கள். இதனுல் செல்லப்பனுல் தன் நிலத்தில் எந்த வேலையையும் செய்ய முடியவில்லை.

மக்கள் இவ்வாறு அவனைக் கடவுளாகக் கருதி புகழவே ஒருநாள் அவன் மிகுந்த கோபத்தோடு "இதெல்லாம் என்ன? நான் கடவுளா? நான் வசிக்கும் குடிசை தான் கோவிலா?" என்று கூறினுன்.



அவ்வளவுதான். அடுத்த விடி அவனது குடிசை கோவிலாக மாறி உயர் கோபுரத்தோடு விளங்கியது. மாடத்து மணிகள் ஒலிக்கலாயின. இந்த அதிசயத்தையும் அங்கு கூடிய மக்கள் கூட்டம் கண்டு அதி சயித்தது.

அப்போது ஒருகுரல் "மகா ஜனங்களே! நல்லவர்களுக்குக் கோபமே வராது. ஒருவேளை அவர் கள் கோபித்துக் கொண்டு ஏதா வது சொன்னுல் அது அப்படியே நடந்து விடும். நல்நடத்தை உடைய வனே கடவுள்" என்றது. அங்கிருந்த வர்கள் எல்லோரும் "செல்லப்பா! நீ தான் இந்தக் கோவிலின் தெய் வம்" என்று சொன்னுர்கள்.

அப்போது செல்லப்பன் தன் இருகைகளையும் கூப்பி எல்லோரை யும் பார்த்து வணங்கி "நான் கடவுளே அல்ல. நல்ல குணமே கடவுள். முடிந்தால் நல்ல குணத் திற்கு உருவம் கொடுத்து அதனை இந்த கோவிலில் பிரதிஷ்டை செய்யுங்கள்" என்ருன்.

அப்பகுதி ஜமீன்தாரர் எல்லோ ருக்கும் முன்வந்து செல்லப்பனைக் கட்டித் தழுவிக் கொண்டார் செல்லப்பன் வசிக்க ஒரு நல்ல வீட்டைக் கொடுத்து விட்டு அந் தக் கோவிலின் நிர்வாகத்தைத் தானே எடுத்துக் கொண்டார். நல்ல குணக்கடவுளின் விக்கிரகத்தைச் செய்து அந்தக் கோவிலில் பிர திஷ்டை செய்ய வேண்டும் என்பது அவரது நோக்கமாக இருந்தது.

யாரைக் கேட்டாலும் நல்ல குணம் என்ருல் என்ன என்று விவர மாகச் சொன்னுர்களேயொழிய நல்லகுணக் கடவுளின் உருவம் எப்படி இருக்கும் என்று யாராலும் சொல்ல முடியவில்லை. நல்லகுணக் கடவுளின் உருவத்தை வர்ணிப் பவருக்கு நல்ல சன்மானம் அளிக் கப்படும் என்றும் ஜமீன்தாரர் அறி வித்துப் பார்த்தார். அப்போதும் யாரும் வந்து சொல்லவில்லை.

இப்படி இருக்கையில் செல்லப் பன் திடீரென்று நோய்வாய்ப்பட் டான். ஜமீன்தாரர் அவனை கவனிக் கத் தக்க வைத்தியரை ஏற்பாடு செய்தார். ஆனுலும் அவன் நோய்

குணமடையவில்லை. நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே போயிற்று. இனி அவன் பிழைக்க மாட்டான் எனக்கண்டு கொண்ட ஜமீன்தாரர் அவனிடம் "உன் கடைசி விருப்பம் என்ன?" என்று கேட்டார்.

செல்லப்பனும் "என் காரணமாக நடந்த அதிசயச் செயல்களை எல்லாம் கண்ட மக்கள் என்னையே கடவுளாக நினைத்து விட்டார்கள். ஆனால் அது உண்மையல்ல. நல்ல குணமே கடவுள். எனவே அதற்கு நீங்களே ஒரு உருவம் கொடுத்து ஒரு விக்கிரகத்தைச் செய்து கோவிலில் பிரதிஷ்டை செய்யுங்கள்" என்று கூறினான்.

ஜமீன்தாரரும் அவ்விதமே செய்வதாக வாக்களித்தார். செல்லப்பனும் நிம்மதியாக உயிர் விட்டான். ஜமீன்தாரர் ஊர்ப் பிரமுகர்களை எல்லாம் ஒன்று கூட்டி "நல்லகுணம் என்றால் என்ன? அதன் உருவம் எப்படி இருக்கும்?" என்று கேட்டார். ஒவ்வொருவரும் ஏதோ தமக்குத் தோன்றியதைச் சொன்னார்கள். முடிவில் எல்லோரும் ஒருமனதாக ஒரு முடிவைச் செய்தார்கள்.

செல்லப்பன் கடவுளின் விருப்பப்படி நல்லவனாய் நடந்து கொண்டவன். இப்போது அவன் உயிருடன் இல்லை. எனவே அவனது உருவையே நல்லகுணத்தின் உருவாக விக்கிரகம் செய்து அந்த விக்கிரகத்தைக் கோவிலில் பிரதிஷ்டை செய்ய வேண்டும். இதுவே அந்த முடிவு.

விரைவிலேயே செல்லப்பனின் உருவச்சிலை தயாராகியது. அந்த விக்கிரகிரத்தைப் பார்த்த மக்கள் எல்லாம் "கடவுளை நல்லவரிடமே காணலாம் நல்லவர் என்பதற்கு நாம் அறிந்த செல்லப்பனே எடுத்துக் காட்டு" என்று கூறினார்கள்.

குடிசையாக இருந்து கோவிலாக மாறிய இடத்தில் செல்லப்பனின் சிலை வைக்கப்பட்டு கடவுளாக அவன் கருதப்பட்டான்.



# பரிசின் அளவு

அந்த சமஸ்தானத்தில் கணக்கனுகப் பணிபுரிந்து வந்த கோபால சர்மா பொக்கிஷத்தில் நடந்த ஒரு லட்சம் வராகன் திருட்டை சாமார்த்தியமாக வெளிப்படுத்தினுன். மன்னர் இதனுல் அவனுக்கு ஒரு தங்க மோதிரம் பரிசாக அளித்தார்.

சில நாட்களுக்குப் பின் கோவிந்தன் என்ற அதிகாரியின் நேர்மை காரணமாக ஒரு நூறு வராகன் மோசடி வெளிப்பட்டது. குற்றவாளி பிடிபட்டு தண்டிக்கப் பட்டான். மன்னர் அதிகாரி கோவிந்தனைப் பாராட்டி ஆயிரம் வராகன்கள் பரிசும் ஒரு தங்கப் பதக்கமும் அவனுக்கு அளித்தார்.

இதை அறிந்த கோபால சர்மா மன்னரை அணுகி, "அரசே! நான் லட்ச வராகன் திருட்டைக் கண்டு பிடித்துக் கொடுத்தேன். அதற்கு எனக்கு ஒரு மோதிரமே பரிசு. ஆனுல் அற்ப நூறு வராகன் லஞ்ச மோசடியை வெளிப்படுத்திய கோவிந்தனுக்கு ஆயிரம் வராகன்களும், தங்கப் பதக்கமும் பரிசு! இது சரிதானு?" என்று முறையிட்டான்.

மன்னனும் "பரிசு திருட்டுப் போன தொகையையோ அல்லது மோசடி செய்த தொகையையோ பற்றி அல்ல. குற்றத்தின் அளவையும் அதைக் கண்டுபிடிப்பவரையும் பொறுத்தது. திருடுவதை விட மோசடி பெரிய குற்றம். அதனுல் அதனைக் கண்டு பிடித்த உயர் அதிகாரிக்கு உன்னைவிட அதிக பரிசு" என்ருர்.

கோபால சர்மா அதைப் புரிந்து கொண்டு தான் அவசரப்பட்டு பேசியதற்கு வெட்கினுன்.






17

*[வீரசிம்மன் சங்கரவர்மனின் மகளான சுகன்யாவை சாந்திபுரத்திற்கு அழைத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தான். வழியில் இளவரசி சுகன்யா மயக்கமுற்று விழவே வீரசிம்மன் கூடாரம் அமைத்து அதில் அவளைப் படுக்க வைத்தான். ஜெயபுரத்திலிருந்து வைத்தியர்கள் வரவழைக்கப்பட்டார்கள். மாலையான பிறகு சுகன்யாவைக் காண கூடாரத்துள் சென்ற வீரசிம்மன் அவளுக்கு பதிலாக ஒரு குரங்குக் குட்டி இருப்பதைக் கண்டு திகைக்க அது அவனைக் கீறிவிட்டு ஓடியது. பிறகு-]*

வீரசிம்மன் அந்தக் குரங்குக் குட்டியைப் பிடித்து வரும்படிக் கட்டளை இட்டான். யாரோ மந்திரவாதிதான் இளவரசியை அவ்விதம் மாற்றி விட்டதாக அவன் நம்பினான். கூடாரத்திற்குள் சென்ற வைத்தியரும் சீடர்களும்தாம் கொண்ட வந்த பையிலிருந்து குரங்குக் குட்டியை அங்கு விட்டு விட்டு இளவரசியை மாறுவேடத்தில் தம்மோடு அழைத்துச் சென்று விட்டார்கள் என்பது வீரசிம்மனுக்குத் தெரியவில்லை!

சர்ப்பதந்தன் வீரசிம்மனின் நிலை கண்டு ஆச்சரியப்பட்டான். மாயம், மந்திரம் என்று கூறி வீரசிம்மனை அவற்றில் நம்பிக்கை கொள்ள வைத்தது அவனே, தங்க விக்கரகத்தைத் தான் கோட்டை விட்டதை மறைக்க சர்ப்பதந்தன்



அது மந்திரவாதியின் செயல் என ஒரு புளுகு விட்டான். வீரசிம்ம னும் அதை நம்பினுன். எனவே இம்முறை இளவரசி காணுமல் போனதும் அவளது இடத்தில் ஒரு குரங்குக் குட்டி இருந்ததும் ஏதோ ஒரு மந்திரவாதியின் செயலே என்று கூற வேண்டும் என்று தீர் மானித்தான்.

அவன் வீரசிம்மனிடம் "நாமும் யாராவது சக்தி வாய்ந்த மந்திர வாதியின் உதவியை நாடத்தான் வேண்டும். நம் எதிரிகளின் சூழ்ச்சிகளை முறியடிக்க அது ஒன்று தான் வழி" என்ருன்.

வீரசிம்மனும் "அது சரி. இப் போது அந்தக் குரங்குக்குட்டியை மீண்டும் இளவரசியாக்க யாராவது மந்திரவாதி கிடைப்பாஞு?" என்று கேட்டான். அதற்கு சர்ப்பதந்தன் "இப்போது குரங்குக்குட்டி ஓடிக் குரங்குகளிடையே மறைந்துவிட் டது. எந்தக் குட்டி இளவரசியாக இருந்தது என்று எப்படிக் கண்டு பிடிப்பது?" என்ருன்.

வீரசிம்மன் யோசனையில் ஆழ்ந் தான். அப்போது ஒருகிளி அவனது தலைக்கு மேலே பறந்து மூங்கில் குழாய் போன்ற ஒன்றை அவன் மீது போட்டுவிட்டுச் சென்றது. அது ஒரு கடிதம். அதை சர்ப்ப தந்தன் எடுத்து வீரசிம்மனிடம் கொடுத்தான்.

வீரசிம்மன் அதைப் பிரித்துப் படித்தான். அதில் "வீரசிம்மா! உன் மட்டரகமான எண்ணத்தி லிருந்து விடுபடவே இளவரசி குரங்குக் குட்டியாக மாறினுள். இப் படி, அவளை வற்புறுத்தி மணக்க உனக்கு வெட்கமாக இல்லை? மரியாதையாக சாந்திபுரத்திற்குப் போய்விடு. சங்கரவர்மனுக்கோ அல்லது ஜெயபுரத்திற்கோ நீ கெடுதல் செய்ய முயன்ருல் உன் உயிர் உன் உடலில் இருக்காது இது இளவரசன் தீபன் உனக்கு விடுக்கும் எச்சரிக்கை" என்று எழுதி இருந்தது.

அதைப்படித்த வீரசிம்மன் பற் களை நறநறவென்று கடித்து "யார் இந்த இளவரசன் தீபன்?" என்று சர்ப்பதந்தனிடம் கேட்டான்.

அதற்கு அவன் "மகாராஜா! அவன் யாரென்று தெரியவில்லை. ஒரு வேளை ஏதாவது ஒரு கொள்ளைக் கார கும்பலின் தலைவனாக இருக்க லாம்" என்றான்.

வீரசிம்மனும் "ஓ! கொள்ளைக் காரத் தலைவன் தன்னை இளவரசன் என்று விளம்பரப்படுத்திக் கொள் கிறானா? என்ன திமிர் அவனுக்கு? நாம் இப்போதே போய் ஜெய புரத்தைத்தாக்க வேண்டும். பார்க் கலாம் இந்த இளவரசன் நம்மை என்ன செய்வான் என்று?" என்று கர்ஜித்தான்.

சர்ப்பதந்தனும் "இப்போதே நம் படைகளை தயார் நிலையில் வைக்கிறேன். ஜெயபுரத்தில் நம்மை எதிர்க்கப் படைகள் இல்லை" என் றான். வீரசிம்மனும் "முட்டாள்தன மாக உளராதே. இது எனக்குத் தெரியாதா? ஜெயபுரத்திற்கு அமர புரி உதவ வந்தால் என்ன செய் வாய்? அமரபுரியின் படைபலம் நம்முடையதை விட மிக அதிக மாயிற்றே" என்று கேட்டான்.

சர்ப்பதந்தனும் "ஆமாம். நாமும் நம் படைபலத்தை அதி கரிக்க வேண்டும். இல்லாவிட் டால் அமரபுரிப் படைகளுக்கு முன் நம் படைகள் நிற்க முடியாது" என்றான். வீரசிம்மனும் "மறுபடி யும் செக்குமாடு போல நாம் சுற்றி வருகிறோம் படைதிரட்டப் பணம் வேண்டும். பணம் திரட்ட ஏதா



வது வழிகண்டு பிடிக்க வேண்டும். நாட்டில் தானியத்தை வரியாக வசூலிக்க முயன்றால் புரட்சிக்காரர் கள் தடுத்து விடுகிறார்கள். மனிதர் கள் தான் நம்மை எதிர்க்கிறார்கள் என்றால் காட்டு மிருகங்களும் பறவைகளும் கூட நம் விரோதி களுக்கு உதவி புரிகின்றனவே" என்றான் சலித்துக் கொண்டே.

அப்போது சர்ப்பதந்தன் "அப் படியானால் நமக்கு ஏதாவது ஒரு பெரிய புதையல்தான் கிடைக்க வேண்டும்" என்றான். விக்கிரமனும் "என்ன சொன்னாய்? புதையலா? ஆம். அது தான் கிடைக்க வெண் டும்" என்று கூறிச்சற்று யோசித் தான். புதையல்கள் பழங்காலக் கட்டடங்களில் அடியில் மறைந்து



கிடக்கும். ஒரு வேளை சாந்திபுர அரண்மனையிலும் எங்காவது மறைந்திருக்கலாம். அதைக்கண்டு பிடிக்க வேண்டும் என நினைத்து வீரசிம்மன் உடனேயே சாந்திபுரத் திற்குத் திரும்பிச் சென்றான்.

அரண்மனைக்குச் சென்ற வீர சிம்மனுக்கு அன்றிரவு முழுவதும் தூக்கம் வரவில்லை. அவன் சர்ப்ப தந்தனை மட்டும் கூட்டிக் கொண்டு அரண்மனையின் எல்லாப் பகுதி களையும் பரிசோதித்துப் பார்த் தான். அரண்மனையில் நீண்டகால மாக வேலை செய்துவரும் இரு கிழப் பணியாட்களிடம் அரண் மனையில் ஏதாவது இரகசிய அறை இருக்கிறதா என்று கேட்டான்.

அவர்கள் தமக்கு எதுவும் தெரி யாது என்று கூறவே வீரசிம்மன் "உங்களுக்குத் தெரியும். மரியாதை யாகச் சொல்லப் போகிறீர்களா அல்லது சித்திரவதை செய்து அந்த ரகசியத்தை உங்களிடமிருந்து கக்க வைக்கட்டுமா?" என்று மிரட்டினான்?

அப்போது அவர்களில் ஒருவன் "மகாராஜா! நான் ஒரு இடத்தை காட்டுகிறேன். அது இப்போது யாருடைய உபயோகத்திலும் இல்லை. பூட்டி வைக்கப்பட்டுள் ளது" என்றான். வீரசிம்மன் அந்தப் பணியாளையும் சர்ப்பதந்தனையும் அழைத்துக் கொண்டு அந்தப் பணியாள் காட்டிய இடத்தை அடைந்தான்.

அந்த இடத்தில் அறையின் கதவு பூட்டப்பட்டிருந்தது. சர்ப்ப தந்தன் பூட்டை உடைத்துக் கத வைத் திறந்தான். இருட்டான அந்த அறைக்குள் மங்கிய ஒளி வந்து கொண்டிருந்தது. அந்த ஒளியில் அறைக்குள் பலபெட்டிகள் அடுக்கி வைக்கப்பட்டிருப்பதை வீரசிம்மன் கண்டான்.

அந்தப் பணியாளும் சர்ப்பதந்த னும் ஒரு பெட்டியைக் கீழே இறக்கி வைத்தார்கள். வீரசிம்மன் அதைத் திறந்து பார்க்கவே அதில் தங்க, வைர ஆபரணங்களாக இருந்தன. மற்ற பெட்டிகளிலும் அது போலவே நகைகள் இருப்பதை அவன் பார்த் துத் தெரிந்து கொண்டான். அவனது



மகிழ்ச்சிக்கு அளவே இல்லே.

அதன் பிறகு அவன்மற்ற இருவரையும் அழைத்துக் கொண்டு அறைக்கு வெளியே வந்தான். அந்த அறைக்கதவை மூடி வேறு பூட்டைப் போட்டு பூட்டி விட்டு அவன் சர்ப்பதந்தனுடன் தன் அறைக்குச் சென்ருன்.

அவன் சர்ப்பதந்தனிடம் "நம் பிரச்னே ஒருவாறு தீர்ந்தது. ஆனுல் இந்த நகைகளேப் பணமாக்க வேண்டும். அப்போதுதான் ஆயுதங்களே வாங்க முடியும். இவற்றில் பெரும் பகுதியை விற்று விடலாம். பிறகு நம்படை பலத்தை அதிகரித்து ஜெயபுரத்தையும் அமரபுரத்தையும் கைப்பற்றி விடலாம். ஆகா! என்ன அதிர்ஷ்டம்" என்ருன்.

சர்ப்பதந்தனும் "நாம் உடனே சந்திரபுரிக்கு ஆளே அனுப்பி இவற்றை மதிப்பிட சிலரை அனுப்பும்படி அங்குள்ள ஆயுத வியாபாரிகளுக்குத் தகவல் கொடுப்போம்." என்ருன். வீரசிம்மனும் அவனே அவ்வாறே செய்யச் சொன்ஞன். சர்ப்பதந்தனும் மறுநாளே ஒருவனேச் சந்திரபுரிக்கு அனுப்பவே அவனும் அங்கு போய்விட்டு வந்து இன்னும் மூன்று நாட்களில் மதிப்பிடுவோர் வருவார்கள் எனத் தெரிவித்தான்.

இதற்கு இரண்டாவது நாள் ஒரு ஒற்றன் வந்து வீர சிம்மனிடம் "சந்திரபுரியிலிருந்து இருபத்தைந்து மதிப்பிடுவோர்கள் வந்து கொண்டிருக்கிருர்கள்" எனத் தெரிவித்தான். அது கேட்டு அவன் "இருபத்தைந்து பேர்களா? ஏதோ ஐந்தாறு பேர்களே வருவார்கள் என்று நினேத்தேன். ஒருவேளே சீக்கிரம் வேலேயை முடிக்க அவ்வளவு பேர்கள் வருகிருர்கள் போலிருக்கிறது. சரி அவர்கள் தங்கதக்க ஏற்பாடுகளேச் சர்ப்பந்தன் செய்வான்" எனக் கூறி அவனே அனுப்பி விட்டான்.

இருபத்தைந்து மதிப்பிடுவோரும் சாந்திபுரத்தை வந்தடைந்த போது இருட்டி விட்டது. வீரசிம்மனே அவர்களே எதிர்கொண்டு அழைத்துச் சென்ருன். அவர்கள் குளித்து சாப்பிட்ட பின் அவர்களே உள் மண்டபத்திற்கு அவன் அழைத்துப்



போனுன். அதன் வாசலை மூடி விட்டு அவன் இரகசிய அறை யிலிருந்து கொண்டு வந்து அங்கு அடுக்கி வைக்கப்பட்ட பெட்டிகளைத் திறந்து காட்டினுன்.

மதிப்பிடுவோர் அவ்வளவு நகைகளைக் கண்டு ஆச்சரியப்பட் டார்கள். பிறகு அவர்கள் "மகா ராஜா! நீங்கள் மாபெரும் அதிர்ஷ்ட சாலியே. இவ்வளவு விலையுயர்ந்த நகைகள் யாருக்குக் கிடைக்கும்? உங்கள் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்" என்று புகழ்ந்தார்கள்.

பிறகு அவர்கள் "இனி எங்கள் வேலையை ஆரம்பிக்கிருேம். எங் களை இங்கேயே தனியே விட்டு இந்த மண்டபத்தின் வெளிக் கதவை நீங்கள் பூட்டிக் கொண்டு போய் விடுங்கள். நாளை விடியும் போது நாங்கள் பட்டியல் போட்டு விலையை மதிப்பிட்டு உங்களிடம் கொடுக்கிருேம்" என்ருர்கள்.

வீரசிம்மனும் திருப்தி அடைந்த வனுய் மண்டபத்தின் நுழைவாசல் கதவைப் பூட்டிக் கொண்டு போனுன். அவ்வப்போது வந்து அக்கதவின் பக்கம் நின்று உள்ளே மதிப்பிடுவோர் பேசியதைக் கேட் டான். இவ்வாறு நடு ராத்திரி வரை அவன் அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு விட்டு அவர்கள் தம் வேலையில் மும்முர மாக ஈடுபட்டிருக்கிருர்கள் என நினைத்து மகிழ்ந்து போய் சற்றுத் தூங்கச் சென்ருன்.

விடியும் வேளைக்கு வீரசிம்ம னின் தூக்கம் கலைந்தது. அவன் உள் மண்டபத்தை நோக்கி சென் ருன். நுழைவாசல் கதவைத் திறந்து கொண்டு அவன் உள்ளே நுழைந் தான். அங்கே யாருமே இருக்க வில்லை. நகைப்பெட்டிகளும் காணும். அவன் உள் மண்டபத் திலிருந்து ராணியின் படுக்கை அறைக்குச் சென்ருன். அங்கு ரக சிய சுரங்கப்பாதைக்குப் போக இருக்கும் கதவு திறந்திருப்பதைக் கண்டான்.

அப்போது தான் அவனுக்கு நகைப் பெட்டிகளோடு மதிப்பிட வந்தவர்கள் அந்த வழியே தப்பிச் சென்று விட்டார்கள் என்பது

தெரிந்தது அப்படியானல் வந்த மதிப்பிடுவோர் யாவரும் கொள்ளைக் காரர்களா? இதென்ன மாயம் என்று அவன் சுற்றிலும் பார்த்தான் ஒரு கடிதம் ஓரிடத்தில் கிடந்தது.

அவன் அதை எடுத்துப் படிக்கலானுன். அதில் "அடே வீரசிம்மா! அரசக் குடும்பத்திற்குச் சொந்தமான நகைகளை எல்லாம் நீ விற்கவா பார்த்தாய? நாங்கள் அவை உன்னிடம் சிக்காமல் செய்து காப்பாற்றி விட்டோம். அந்த நகைகள் எல்லாம் இளவரசன் தீபனுக்குச் சொந்தமானவை. அவை அவரிடமே வெகு பத்திரமாக உள்ளன. இன்னெரு விஷயம். உன் ஆட்களை நீ நகருக்குத் தெற்கேயுள்ள கரடிமலைக்கு அனுப்பு சந்திரிபுரியிலிருந்து வந்த உண்மையான மதிப்பிடுவோர் அங்கு கட்டப்பட்டுக் கிடப்பார்கள். பாவம்! அவர்கள் தாகத்தாலும் பசியாலும் துடிதுடித்துக் கொண்டிருப்பார்கள். எனவே அவர்களுக்கு உணவும் நீரும் கொண்டுபோ. அவர்களது கட்டுகளை அவிழ்த்து விடுதலைசெய். அதற்காவது உன் இடைவாள் பயன்படும்'' என்று எழுதி இருந்தது.

வீரசிம்மன் இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். அவன் சர்ப்பதந்தனை அழைத்து விஷயத்தைச் சொல்லி "நீ முதலில் கரடி மலைக்குப் போய் வியாபாரிகள் அனுப்பிய மதிப்பிடுவோரை விடுவி. இங்கே வந்தவர்கள் தீபனின் ஆட்கள். கொள்ளைக்காரர்கள். அவர்களை நம்பி மோசம் போய் விட்டேன்'' என்றுன்.

அதைக் கேட்ட சர்ப்பதந்தன் திகைத்துப் போனுன். அந்த நிலையில் என்ன சொல்வது என்று அவனுக்கு தெரியவில்லை. பேசாமல் இருப்பதே மேல் என நினைத்து சர்ப்பதந்தனும் அவனது கட்டளைப்படியே கரடிமலைக்குப் போய் அங்கு கட்டப்பட்டிருந்த சந்தனபுரி மதிப்பிடுவோர்களின் கட்டுகளை அவிழ்த்து விடுவித்தான்.

(அடுத்த இதழில் முடிவுறும்)






# பெண்ணின் மனம்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! சுகமாகப் பஞ்சணையில் படுத்து இந்த வேளையில் தூங்கவேண்டிய நீ யாருக்காகவோ இப்படிப் பாடுபடுகிறாயே. அவன் உனக்கு நன்றி செலுத்தக் கூட முன் வருவானோ, மாட்டானோ? யார் கண்டார்கள்? இதை விளக்க உனக்கு சியாமளா என்ற பெண்ணின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகுநாட்களுக்கு முன் மேலூரில் மாணிக்கம் என்ற மாடு மேய்ப்பவன் இருந்தான். அவனுக்கு இசையில் மிகவும் விருப்பம். அவனது குரலும் கேட்க இனிமையாக

## வேதாளம் சொல்லும் கதை



இருக்கும். அவனுக்குள்ள சிறு வீட்டில் அவன் தாய் இருந்தாள். பகலெல்லாம் மாடுகளை ஓட்டி மேய்த்து வந்துவிட்டு இரவில் சாப்பிட்ட பின் கொல்லைப்புறத்தில் கயிற்றுக் கட்டிலைப் போட்டுப் படுத்துக் கொள்வான். பிறகு அவன் பாடிக் கொண்டிருக்கும்போது பாட்டைப் பாதியிலேயே நிறுத்த வேண்டிவரும். அதற்குக் காரணம் சியாமளாதான்.

சியாமளா பணக்காரன் பாஸ்கரனின் மகள். பாஸ்கரனின் மனைவி சியாமளாவை இரண்டு வயதுக் குழந்தையாக இருக்கும்போது விட்டுவிட்டு இறந்து போனாள். அதன்பிறகு பாஸ்கரன் வேறொருத்தியை மணந்து கொண்டான். சியாமளாவின் சிற்றன்னை அவளைக் கொடுமைப்படுத்தி வேலைக்காரியிலும் கேவலமாக நடத்தி வந்தாள். சியாமளாவின் ஒரு கால் பலவீனமானது. அதனால் அவள் நொண்டி நொண்டி நடந்து எல்லா வேலைகளையும் செய்ய வேண்டி இருந்தது. நாள் முழுவதும் வேலை செய்து விட்டு இரவில் படுக்க அவளும் தன் வீட்டுக் கொல்லைப்புறத்திற்குத்தான் வருவாள். அப்போது அவள் தன் கஷ்டங்களை நினைத்து வாய்விட்டு அழுவாள். இந்த அழுகை அப்பணக்காரனின் வீட்டின் பக்கத்திலுள்ள மாணிக்கம் பாடிக் கொண்டிருக்கும்போது ஆரம்பமாகும். அதனால் அவனால் பாட்டைப் பாதியில் நிறுத்த வேண்டிவரும்.

அவளது அழுகை நிற்கவும் தான் தன் இஷ்டப்படி பாடவும் என்ன செய்யலாம் என்று மாணிக்கம் யோசிக்கலானான்.

மாணிக்கம் ஒருநாள் தன் மாடுகளை ஓட்டிக் கொண்டு காட்டில் வெகுதூரம் சென்றான். அங்கு பரந்த புல்வெளியில் மாடுகளை மேயவிட்டு அவன் ஓரிடத்தில் உட்கார்ந்தான். அங்குள்ள இயற்கைக் காட்சி அவன் மனதை உல்லாசப்படுத்தியது. அதனால் அவன் தன் இனிய குரலில் பாடலானான்.

அவன் எவ்வளவு நேரம் பாடினான் என்பது அவனுக்கே தெரி

யாது. அவன் பாட்டை நிறுத்தி விட்டுப் பார்த்தபோது ஒரு முனிவர் தன் எதிரே உட்கார்ந்திருப்பதைக் கண்டான். உடனே அவன் எழுந்து அவரை வணங்கி "சுவாமி. தாங்கள் இங்கு வெகுநேரமாக உட்கார்ந்திருக்கிறீர்களா?" என்று பணிவுடன் கேட்டான்.

முனிவரும் "அப்பனே! இசை தான் மனதிற்கு எவ்வளவு ஆறுதலை அளிக்கிறது! நான் உன் இனிய கானத்தை ஒரு மணி நேரமாகக் கேட்டு அப்படியே மெய் மறந்து விட்டேன். உனக்கு ஏதாவது வேண்டுமானுல் கேள்." கொடுக்கிறேன் என்ருர்.

அப்போது மாணிக்கம் "சுவாமி! நான் இந்த உலகில் மிகவும் விரும்புவது இசையையே. பகல் முழுவதும் அலேந்து திரிந்துவிட்டு இரவில் படுத்துக் கொண்டு நிம்மதியாகப் பாடலாம் என்ருல் அது கூட என்னுல் முடியாமல் போகிறதே" என்ருன் சலிப்புடன்.

அதைக்கேட்ட முனிவர் ஆச்சரியப்பட்டவராய் "ஏன் முடியவில்லே?" என்று கேட்டார். அப்போது அவன் சியாமளாவைப் பற்றிக் கூறி "நாளுக்கு நாள் அவள் அழுகை அதிகரித்துக் கொண்டு தான் போகிறது. நான் பாடிக் கொண்டிருக்கும்போது அவளது அழுகை அபஸ்வரமாக ஒலிக்கிறது. அதனுல் என்னுல் தொடர்ந்து



பாட முடிகிறதில்லே" என்ருன்.

முனிவரும் சற்று யோசித்து விட்டு "சரி. அவளே நீ என் ஆசிரமத்திற்கு அழைத்து வா, அதனுல் அவளுக்கு நன்மையே ஏற்படும். எவ்விதக் கெடுதலும் ஏற்படாது. நீ அவளது தாய் தந்தையரிடம் விவரமாகச் சொல்லி அழைத்து வா. அதோ தெரிகிறதே. அதுதான் என் ஆசிரமம்" என்று கூறி எழுந்து சென்ருர்.

மாணிக்கம் காட்டிலிருந்து திரும்பி வந்து அன்றிரவே பாஸ்கரனேயும் அவனது இளேய மனேவியையும் கண்டு காட்டிலுள்ள முனிவர் பற்றிக்கூறி சியாமளாவை அவர் சில நாட்கள் தம் ஆசிரமத்திற்கு வந்து இருக்கச் சொன்னதைக்



கொள்கிறேன். பதினைந்து நாட்களுக்கு இங்கேயே இரு" என்றார். அவளும் சம்மதிக்க மாணிக்கமும் பிறகு வருவதாகக் கூறிச் சென்றான்.

மாணிக்கம் ஒரு மாதத்திற்குப் பிறகே அந்த முனிவரின் ஆசிரமத்தை அடைந்தான்.

அப்போது அவன் அந்த ஆசிரமத்தை ஒட்டி பனை ஓலைகளால் மேயப்பட்ட பெரியதொரு குடிசையைக் கண்டான். அதன் முன் ஆண்களும் பெண்களுமாய் பத்து பேர்கள் உட்கார்ந்து கூடைகள் தட்டிகள் என்று மூங்கிலால் வித விதமான பொருள்களைச் செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் யாவரும் உடல் ஊனமுற்றவர்களே.

மாணிக்கம் அக்காட்சியைக் கண்டு ஆச்சரியம் அடைந்தான். அவர்களில் ஒருவனிடம் முனிவர் ஆசிரமத்தில் இருக்கிறாரா என்று கேட்டான். அவன் தான் ஊமையும் செவிடும் என்றும் சொல்வதைச் சற்று உரக்கக் கூறுமாறும் சைகை காட்டினான். மாணிக்கமும் சைகைகளால் அவனுக்குச் சொல்லவே அவனும் ஆசிரமத்துள் போய் முனிவரை அழைத்து வந்தான்.

மாணிக்கம் முனிவரைக் கண்டதும் அவரை வணங்கி "சுவாமி! இதெல்லாம் என்ன? தாங்கள் தவம் செய்யவில்லையா? சியாமளா இப்போது எப்படி இருக்கிறாள்?"

கூறி அதனால் அவளுக்கு நன்மை ஏற்படும் எனச் சொன்னான்.

அதைக்கேட்ட பாஸ்கரன் கொஞ்ச நாட்களுக்காவது சியாமளா அவளது சிற்றன்னையின் கொடுமைகளிலிருந்து தப்பட்டுமே என்று எண்ணி அவளை அனுப்பச் சம்மதித்தான். சியாமளாவின் சிற்றன்னையோ மறுநாளே அவளை அனுப்ப ஏற்பாடுகளைச் செய்தாள்.

மறுநாள் மாணிக்கம் சியாமளாவை அழைத்துக் கொண்டு முனிவரின் ஆசிரமத்திற்குச் சென்றான். முனிவரும் சியாமளாவை அன்புடன் வரவேற்று பரிவுடன் தடவிக் கொடுத்து "கவலைப்படாதே மகளே! உன்னை என் சொந்த மகளைப் போல நினைத்து கவனித்துக்

என்று கேட்டான்.

முனிவரும் புன்னகை புரிந்த வாறே "இதுபற்றி எல்லாம் நான் சொல்வதற்கு முன் என்னைப் பற்றி உனக்குக் கூற வேண்டும். அப்படி அந்தப் பாறை மீது உட்கார்ந்து பேசலாம் வா" என்று கூறி அவனோடு சென்று ஒரு பாறை மீது உட்கார்ந்தார். பிறகு அவர் தம்மைப் பற்றிக் கூறலானார்.

"என் பெயர் ஞானானந்தர். நானும் சிறுவயதில் சியாமளா வைப் போல என் சிற்றன்னையின் கொடுமைகளுக்கு ஆளானவனே. ஒருமுறை அவள் கோபம் கொண்டு சூட்டுக் கோலால் என் உடல் முழு வதிலும் சூடு இழுத்து விட்டாள். அப்போது எனக்கு வயது ஏழு. வலி பொறுக்க முடியாமல் காட்டிற்குள் ஓடினேன். அப்போது இந்த ஆசிரமத்தில் மகானந்தர் என்ற முனிவர் இருந்தார். அவர் என் உடலிலுள்ள தீப்புண்களைக் கண்டு அதற்கு என்ன காரணம் என்று கேட்டார்.

நானும் என் சிற்றன்னையின் கொடுமைகளைப் பற்றிக் கூறினேன். அவர் என் மீது இரக்கப் பட்டு ஏதோ பச்சிலைகளைக் கொண்டு வந்து அதன் சாற்றை என் உடல் முழுவதும் தடவினார். என் உடல் காயங்கள் எல்லாம் ஒரு வாரத்தில் ஆறிவிட்டன. அன்று முதல் நான் அவரது சீடனாகி அவருக்குப் பணி விடைகள் செய்த வந்தேன். அவர் கற்றுக் கொடுத்த எல்லா சாஸ்திரங்களிலும் நல்ல தேர்ச்சி அடைந்தேன்.





மூலிகை, பச்சிலை வைத்திய முறைகளைத் தெரிந்து கொண்டேன். அவர் எனக்கு ஞானாந்தர் என்ற பெயரை வைத்து இந்த ஆசிரமத்தையும் என்னிடம் ஒப்படைத்து விட்டு உயிர் நீத்தார்.

அவர் இறந்த பின் நான் இங்கேயே இருந்து தவம் செய்தவாறு காலம் கழித்து வருகிறேன். இந்த நிலையில்தான் நான் உன்னைச் சந்தித்தேன். அதன்பின் சியாமளா இங்கு வந்தாள். அவளது காலை குணப் படுத்தி நன்கு நடக்கும் படி செய்தேன். அவளது உடலில் ஏற்பட்ட காயவடுக்களை முழுவதும் போக்கி விட்டேன். இதன் பிறகு அந்த ஊமை வந்தான் அவன் ஒரு ஆற்றங்கரையில் நினைவு இழந்து விழுந்து கிடந்தான். அவனைக் கண்ட சியாமளா அவனது மயக்கம் தெளிவித்து அவனை இங்கு அழைத்து வந்தாள். அவன் மூங்கிலைக் கொண்டு எவ்வளவு அற்புதமாய் விதவிதமான பொருள்களை செய்கிறான்!

அதன் பின் உடல் ஊன முற்ற வேறு சிலரும் வந்தார்கள். எல்லோருக்கும் நான் சிகிச்சை அளித்து கொண்டிருக்கிறேன். சியாமளா இப்போது முற்றிலும் குணமடைந்து விட்டாள். அவள் எப்போது வேண்டுமானாலும் அவளது வீட்டிற்குப் போகலாம். அவள் விரும்பினால் இங்கேயே இருந்தும் விடலாம்.

மாணிக்கம் அவர் சொன்னதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். அப்போது சியாமளா ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து கொண்டிருந்தான். மாணிக்கம் அவளைக் கண்டு பிரமித்துப் போனான். அவள் உடலில் ஒரு காய வடு கூட இல்லை. உடல் தங்கம் போல மின்னியது. அவள் நொண்டவில்லை.

மாணிக்கத்தைக் கண்டதும் சியாமளா குடத்தை இறக்கி வைத்து விட்டு பணிவுடன் அவனை வணங்கி தன் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டான். மாணிக்கத்திற்கு அவளிடமோ, முனிவரிடமோ என்ன பேசுவது என்றே தெரிய

வில்லே. அவன் உடனே திரும்பிச் சென்றான்.

அன்றிரவு முழுவதும் மாணிக்கத்திற்குத் தூக்கமே வரவில்லே. அவன் தன் முன் சியாமளா தோன்றிக் கொண்டிருப்பது போலக் கண்டான். மறுநாள் அவன் ஞானனந்தரின் ஆசிரமத்திற்குப் போய் "சுவாமி! சியாமளாவைப் பற்றிய நினேவே நேற்றிரவு முழுவதும் எனக்கு இருந்தது. அவள் மறுபடியும் தன் வீட்டிற்குப் போனுல் அவளது சிற்றன்னே அவளே ஒரு வேலேக்காரி போலத் தான் நடத்துவாள். அவளே இந்த ஆசிரம வாழ்க்கையை மேற்கொள்ளச் செய்வதும் சரியல்ல. எனவே உங்களுக்கு ஆட்சேபணே எதுவும் இல்லே என்றுல் அவளே நான் மணந்து கொண்டு என் வீட்டிற்கு அழைத்து செல்கிறேன்" என்றான்.

ஞானனந்தரும் "எனக்கு ஆட்சேபணே இல்லே என்றுலும் சியாமளாவின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டு அதன்படி நடப்பதே சரி" எனக்கூறிவிட்டு அவர் தம் குடிலுக்குள் சென்றார். இரண்டு நாழிகை நேரம் கழித்து அவர் திரும்பிவந்து "மாணிக்கம்! சியாமளா உனக்கு ஏற்றவள் இல்லே என்பதை பணிவுடன் தெரிவிப்பதாக உன்னிடம் சொல்லச் சொன்னுள். நீ நேற்று கண்ட அந்த ஊமையைத்தான் மணந்து கொள்ளப் போகிறுளாம்" என்றார். பிறகு அவர் ஒரு புல்லாங்குழலே எடுத்துக் கொடுத்து "இது



சியாமளாவை மணக்கப் போகிற வன் செய்தது. அவர்கள் இரு வரும் இதனை உனக்கு அன்பளிப் பாக அளிக்கிறார்கள்'' என்றார். மாணிக்கம் அதனை வாங்கிக் கொண்டு மௌனமாக அங்கி ருந்து சென்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''சியாமளா மாணிக்கத்தை மணக் காதது அவன் செய்த உதவிக்கு நன்றிக் காட்டாததுதானே. அவள் செய்தது சரியா? இக்கேள்விக்கு விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மாணிக்கம் சியாமளா விஷயத்தில் ஆரம்பத் திலிருந்தே சுயநலத்துடன் நடந்து வந்திருக்கிறான். அவளது அழகை தன் இசைக்கு இடைஞ்சலாக இருக்கிறது என்ற காரணத்தால் தான் அவளை மாணிக்கம் முனி வரது ஆசிரமத்தில் சேர்த்தான். அவள் மீது இரக்கப்பட்டு அவ் வாறு செய்யவில்லை. நொண்டி யாயும் உடல் முழுவதும் தழும்பு கள் கொண்டிருந்தும் இருந்த சியா மளாவை அவன் மணப்பதாகக் கூறவில்லை. ஆனால் அவளது தழும்புகள் மறைந்து, கால் சரி யாகி தளதளவென மேனி மின்னு வதைக் கண்ட பிறகே அவன் அவளை மணக்க விரும்பினான். ஒரு பெண் உடல் ஊனமுற்று இருந்த போது மணக்க முன் வராத ஒருவனை அவளது உடல் ஊனம் மறைந்த பின் அவன் மணக்க முன் வந்தால் அவனை எந்தப் பெண்ணும் நிராகரிப் பாள். எனவே சியாமளா நன்றி கெட்டத்தனமாக நடந்து கொள்ள வில்லை'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உட லோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# மகான்கள் காணவிரும்பிய பாரத நாடு

## குறிக்கோளின் ஒளி

அன்னியர் ஆட்சியிலிருந்து நம் நாடு விடுதலை பெற ஆயிரக்கணக்கான விடுதலை வீரர்கள் தம் உயிரை அர்ப்பணித்தார்கள். 1914ல் இளைஞர்கள் ஒன்று கூடி 'கதர் (புரட்சி) கட்சி'யை நிறுவினார்கள். கனடாவிலும் ஜெர்மனியிலும் இவர்கள் செயல்பட்டார்கள். முதலாவது உலகப் போரின் போது இந்திய ராணுவத்தை ஆட்சியாளருக்கு எதிராகக் கலகம் செய்யும்படி தூண்டி உற்சாகப்படுத்தினார்கள். இவர்களது இந்த முயற்சி பலிக்கவில்லை. அவர்கள் பிடிபட்டு நாற்பத்திரண்டு பேர்களுக்கு மரணதண்டனையும், நூற்றுப் பதினான்கு பேர்கள் நாடு கடத்தப்பட்டும் தொண்ணூற்று மூன்று பேர்கள் கடுங்காவல் தண்டனையும் அனுபவிக்க வேண்டியதாயிற்று.

தூக்கிலிடப்பட்டவர்கள் ஒவ்வொருவராக பாரதமாதாவின் புகழ் பாடியவாறே சிரித்த முகத்துடன் உயிர் துறந்தனர். தூக்கு தண்டனை பெறுமுன் அவர்கள் வேண்டியது இதுவே. "தாயே! நாங்கள் உன் விலங்குகளை அறுத்தெறிய முடியாது போனோம். எங்களில் யாராவது உயிர் தப்பினால் உன் பெருமையையும் புகழையும் காக்க, மக்கள் சுதந்திரம் அடைய, எல்லோரும் சமம் என்ற நிலை எய்ய எம் வாழ்நாள் முழுவதும் பாடுபடுவோம்?"

## உங்களுக்குத் தெரியுமா?

1. அயோத்தியைத் தலைநகராகக் கொண்டிருந்த நாடு எது?
2. இராமரின் வம்சத்தை ஆரம்பித்தவர் யார்?
3. விஜய நகர சாம்ராஜ்யத்தை நிறுவிய இரு சகோதரர்கள் யார்?
4. விஜய நகர சாம்ராஜ்யம் எப்போது நிறவப்பட்டது?
5. விஜய நகர சாம்ராஜ்யத்தை ஆண்ட மன்னர்களில் புகழ் பெற்றவர் யார்?

(விடை 36ம் பக்கத்தில்)

# சிவன்

உயிரினங்களின் துயர் போக்குபவர் எனப் போற்றப்படும் கடவுள் சிவன். படைப்பிற்கு பிரம்மா. நிலை நிறுத்த விஷ்ணு. சிவன் அழித்தலைச் செய்து நன்மை பயக்கிறார். இவர்கள் மூவரும் திரிமூர்த்திகள் எனப் படுகிறார்கள். சிவன் அழித்தலை மேற்கொள்வதால் உலகில் பிரம்மாவின் படைப்புகளுக்கு இடம் ஏற்படுகிறது. உலகில் மாறுதல் ஏற்படவும் இது அடிப்படையாகிறது. இதனைத் தான் சிவபிரானின் நடராஜ உருவம் வெளிப்படுத்துகிறது. காலத்தை நிர்ணயிப்பவராதலால் சிவபிரானுக்கு மகா காலர் என்ற பெயரும் ஏற்பட்டது.

சிவம் என்றால் சுபம் என்று பொருள். நிலையானவர் என மற்றொரு பொருளும் இதற்கு உண்டு. சிவனுக்கு சங்கரன், ருத்திரன், மகாதேவன் என்ற மற்ற பெயர்களும் உண்டு. பார்வதி சிவபிரானின் மனைவி. இவளுக்கு சதிதேவி, உமா, துர்க்கா என்ற பெயர்களும் உண்டு.

லிங்கம் என்றால் குறி என்பது பொருள். சிவனை லிங்க வடிவில் வழி படுவது அவரது தெய்வீகப் பரிபூர்ண சக்தியைக் காட்டுவதாகும்.

## பணக்காரர் பாழாக்கும் சுற்றுப்புற சூழ்நிலை

வெல்த் வாட் என்ற பத்திரிகை பணக்காரர்களே இயற்கை வனவளத்தைத் தம் சொந்த லாபத்திற்குப் பயன்படுத்திச் சுற்றுப் புறச் சூழ்நிலையைப் பாழாக்குபவர்கள் என்று கூறுகிறது.

கார் டிரைவர்கள் இறைச்சி உண்போர், பலவித உணவுப் பொருள்களை மித மிஞ்சி உண்போர், பல்வித வாயுக்களை உண்டாக்கு வோர், காற்று மண்டலத்தை மாசுபடுத்து வோர் ஆகியோர் தம் பணபலத்தால் தானே இவ்வாறு செய்ய முடிகிறது என ஒரு ஆய்வு முடிவுக்கு வந்துள்ளது.



மா செய்திகள்



## மாமேதையான சிறுவன்

தென் லண்டனில் விம்பிள்டனைச் சேர்ந்த கணேஷ் சிற்றம்பலம் என்ற பதினறு வயதுச் சிறுவனை சர்ரே பல்கலைக் கழகம் தனது கணிதப் பிரிவில் சேர அனுமதித்துள்ளது. அவன் தன்னை விட இரு மடங்கு வயதான மாணவர்களோடு சேர்ந்து படித்து வருகிறான். மற்ற பாடங்களில் கணேஷ் அவர்களுக்குச் சமமாக இருந்த போதிலும் கணிதத்தில் அவன் மற்றவர்களை மிஞ்சி வியக்கத்தக்க விதத்தில் தன் திறமையைக் காட்டி வருவதாக இவனது ஆசிரியர்கள் கூறுகிறார்கள். இவனது பெற்றோர்களும் கணித மேதைகளே.

# இலக்கிய உலகம்

1. மரணதண்டனை பெற்று அது நிறைவேற்றப்படுமுன் மன்னிக்கப்பட்ட பிரபல எழுத்தாளர் யார்?
2. அவர் எழுதிய முக்கிய நாவல்கள் எவை?
3. ஷேக்ஸ்பியரின் நாடகங்களைத் தொகுத்து முதல் முறையாக எப்போது வெளியிடப்பட்டது?
4. தாம் வசிக்கும் நகருக்குத் தன் பெயரையே வைக்க வேண்டுமெனக் கோரிய புகழ்பெற்ற எழுத்தாளர் யார்?
5. தன் தாய் மொழியில் குழந்தைகளுக்குக் கதைகள் எழுதிய புகழ்பெற்ற இந்தியத் திரைப்பட இயக்குனர் யார்?

## விடைகள்

### உங்களுக்குத் தெரியுமா?

1. கோசலம்.
2. இக்ஷ்வாகு.
3. ஹரிஹரர், புக்கர்.
4. 1335ல்-ஹம்பி.
5. கிருஷ்ண தேவராயர்.

### இலக்கியம்

1. தியோடர் தோஸ்காஸ்கி (1821-87)
2. பிரதர்ஸ் லார்மாஜோவ், கிரைம் அண்ட் பணிஷ்மெண்ட்.
3. 1623ம் ஆண்டில்.
4. விக்டர் ஹ்யூகோ.
5. சத்தியஜித் ராய்.



# டரையஸ்

பாரசீக இளவரசன் ஸ்மேர்டியஸை சிலர் ரகசியமாகக் கொன்று விட்டார்கள். இந்தச் செய்தி அந்த இளவரசனைப் போல தோற்றம் கொண்டிருந்த ஒரு இளைஞனுக்குத் தெரிந்தது. அவன் தானே இளவரசனாக நடித்துப் பதவி ஏற்பது எனத் தீர்மானித்துக் கொண்டான்.

உடனேயே அவன் இளவரசன் போலவே வேடம் அணிந்து அரண்மனைக்குச் சென்றான். மக்கள் அவனைப் போலி இளவரசன் என சந்தேகிக்கவே இல்லை. ஓரிரு ஆண்டுகளுக்குப் பின் மன்னன் இறக்கவே இந்தப் போலி இளவரசன் நாட்டின் மன்னனாகி விட்டான்.





ஆனால் உண்மையை ஏழு வாலிபர்கள் அறிந்து கொண்டு கலகம் செய்து போலி இளவரசனாக நடித்து மன்னன் ஆன அவனைச் சிம்மாசனத்திலிருந்து இறக்கியதோடு அவனுக்கு மரண தண்டனையும் விதித்தார்கள்.



போலியாக நடித்து மன்னனை வனின் மரணத்தால் மக்கள் மகிழ்ந் தனர். நற்குணங்கள் கொண்ட அந்த ஏழு இளைஞர்களில் ஒருவனைத் தம் மன்னனாக ஏற்க அவர்கள் முன் வந் தார்கள்.

தம்மில் யார் மன்னன் ஆவது என் பது பற்றி யோசித்து அவர்கள் ஒரு முடிவிற்கு வந்தார்கள். அதன்படி மறுநாள் மைதானத்தில் ஏழு பேரும் தம் குதிரைகளை நிறுத்தி அதன் மீது ஏறி சவாரி செய்வது என்றும் யார் குதிரை முதலில் கனைக்கிறதோ அவன் தான் மன்னன் ஆக வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.





அந்த ஏழு வாலிபர்களில் டரை யஸ் என்பவன் நல்ல வீரன். அவன் வேலையாள் மிகுந்த புத்திசாலி. அந்த இளைஞர்கள் பேசி முடிவு செய் ததை அவன் கேட்டுக் கொண்டிருந் தான். அதனால் அவன் யோசனை செய்து அன்று மாலை அந்த மைதானத் தில் ஒரு ஈச்ச மரத்தடியே உள்ள புல்வெளியில் தன் எஜமானனின் குதிரையை மேயவிட்டான்.

குதிரையும் அந்த இடத்தில் நன்கு புல் மேய்ந்தது. அது திருப்தியாகியது கண்டு அந்த வேலையாள் அதனை ஓட்டி வந்து லாயத்தில் கட்டினான். அன்றிரவுப் பொழுது கழிந்தது.





மறுநாள் காலை அந்த ஏழு இளைஞர்களும் தம் குதிரைகளோடு மைதானத்திற்கு வந்தார்கள். சூரியோதயம் ஆகும்போது அவர்கள் குதிரைகளின் மீது அமர்ந்து ஓட்டினார்கள்.

டரையஸின் குதிரை முன்தினம் தான் மேய்ந்த புல்வெளியைக் கண்டு சந்தோஷப்பட்டு தன் முன்னங்கால்களை தூக்கி பலமாகக் கனைத்தது.





அடுத்த விநாடியில் மற்ற ஆறு இளைஞர்களும் தம் குதிரைகளிலிருந்து கீழே இறங்கி டரையஸ்தான் மன்னனாகும் அதிர்ஷ்டசாலி என்று கூறினார்கள். அவனுக்கு மன்னனுக்குச் செலுத்த வேண்டிய மரியாதைகளை அவர்கள் செலுத்தினார்கள். டரையஸுக்கு அவன் வேலையாள் செய்த தந்திரம் தெரிந்திருக்கவில்லை. அதனால் தனக்கு அதிர்ஷ்டம் இருப்பதாக அவன் நம்பினான்.

அந்த ஆறு இளைஞர்களும் மாமன்னர் டரையஸ் 'வாழ்க' எனக் கோஷங்கள் போட்டவாறே டரையஸை நகருக்குள் அழைத்துச் சென்றார்கள். மக்களும் வழியில் இரு புறங்களிலும் நின்று தம் புதிய மன்னனை மகிழ்ச்சியுடன் வரவேற்றார்கள்.





டரையஸ் பாரசீக மன்னனாக அரியணையில் அமர்ந்தான். அவன் மாபெரும் மன்னன் என்று புகழ் பெற்றான். ஒருவேளை டரையஸின் வேலையாளைக் கொண்டு விதி விளையாடி அவனுக்கு அந்த அதிர்ஷ்டத்தை அளித்தது போலும். டரையஸின் பெயர் வரலாற்றில் நிலையான இடம் பெற்று விட்டது.



# காரணம் அது!

தவிட்டூரில் தங்கப்பன் என்ற ஏழைத் தொழிலாளி தன் மனைவி செல்லியுடன் குடித்தனம் நடத்தி வந்தான். அவர்களது ஒரே மகன் வேலன். வேலனுக்கு ஐந்து வயதான போது தங்கப்பனும் செல்லியும் இறந்து போனார்கள். அதனால் வேலன் யாருமற்ற அனாதை ஆனான்.

அந்த ஊரார் வேலன் மீது இரக்கம் கொண்டு தினமும் அவனுக்கு யாராவது ஒருவர் வீட்டில் சாப்பாடு போட்டார்கள். அவனும் இவ்விதம் சாப்பிட்டு விட்டு அவரவர்கள் சொன்ன சிறு சிறு வேலைகளைச் செய்து வந்தான். சில சமயம் பலர் தம் வேலைகளை ஒரே சமயத்தில் செய்யக் கூப்பிடவே வேலன் யாராவது ஒருவரின் வேலையைத்தான் செய்ய முடிந்தது. ஆனாலும் அந்த வேலையைச் செய்தபின் மற்றவர்கள் வேலைகளையும் செய்து அவர்களது அன்பையும் ஆதரவையும் பெற்று வந்தான்.

அவ்வூர் பணக்காரர்களில் ஒருவரான பரமானந்தம் ஒருநாள் வேலனைக் கூப்பிட்டு "நீ வீடு வீடாகப் போய் சாப்பிட்டு எத்தனை நாட்களுக்குத்தான் இந்த ஊராருக்கு வேலை செய்து கொண்டே இருப்பாய்? பேசாமல் என் வீட்டு வேலைகளை மட்டும் செய். இரண்டு வேளை சாப்பாடு போடுகிறேன். உனக்கு அலைச்சலும் மிச்சம்." வேறு வேலைகளைச் செய்யவும் வேண்டாம். நிம்மதியாக ஒரே இடத்தில் நீ இருக்கலாம்" என்றான். வேலனும் அதற்குச் சம்மதித்து பரமானந்தத்தின் வீட்டில் சாப்பிட்டு அந்த வீட்டின் வேலைகளைச் செய்யலானான். மற்றவர்களுக்கு வேலை செய்யவில்லை.

ஒருமாதம் கழிந்தது. அப்போது

-சிவனார் செல்வன்-

சின்னசாமி என்ற பணக்காரன் வேலனை அழைத்து "நீ என் வீட்டு வேலைகளைச் செய். நீ அந்தப் பரமானந்தத்தின் வீட்டில் ஊசிப் போன பழைய சோற்றை எவ்வளவு நாட்களுக்குத்தான் தின்பாய்? உனக்கு நல்ல சாப்பாடு போட்டு தினம் ஒரு ரூபாய் கொடுக்கிறேன். உனக்கு சாப்பாட்டோடு பணமும் கிடைக்கிறது பார்" என்றான். வேலனும் அதற்குச் சம்மதித்து பரமானந்தத்தின் வீட்டில் வேலை செய்வதை விட்டு விட்டு சின்னசாமியின் வீட்டில் வேலை செய்யலானான். இதனால் பரமானந்தத்திற்கும் சின்னசாமிக்கும் வாய்ச்சண்டையில் ஆரம்பித்து கடைசியில் அடிதடி சண்டையில் போய் முடிந்தது. இதற்குப்பின் அவர்களிடையே பேச்சு வார்த்தையும் நின்று போயிற்று

இதற்கு இரண்டு மாதங்களுக்குப் பின் பொன்னுசாமி என்ற பணக்காரன் வேலனை அழைத்து "வேலா! உன்னைப் போல் வேலை செய்பவர்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்து நல்லவிதமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். நீ என் வீட்டில் வந்து வேலை செய். உனக்கு இரண்டு வேளை சாப்பாடு, மாதச் சம்பளம் ஐம்பது ரூபாய் கொடுப்பதோடு பொங்கல், தீபாவளிகளின் போது புத்தாடைகளையும் வாங்கிக் கொடுக்கிறேன். ஒழிந்த நேரத்தில் என் குழந்தைகளோடு சேர்ந்து நீயும் படித்து வரலாம்" என்றான். வேலனும் சின்னசாமியின் வீட்டு வேலையை



விட்டு விட்டுப் பொன்னுசாமியின் வீட்டில் வேலை செய்யலானுன்.

இதனுல் சின்னசாமிக்குப் பொன்னுசாமி மீது அடங்காக் கோபம் வந்தது. ஒருநாள் நாலு பேர் மத்தியில் அவன் பொன்னு சாமியைக் கண்டபடி திட்டி "நீ எப்படி என் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த வேலனை உன் வீட்டில் வேலை செய்ய அழைத்துப் போகலாம்?" என்று கேட்டான்.

பொன்னுசாமியும் "வேலன் உனக்கு நிரந்தர அடிமையா என்ன? எங்கே அதிகம் சம்பளம் கிடைக்கிறதோ அங்கேதான் வேலை செய்வான். நீ பரமானந்தத்தை விட அதிகமாக சம்பளம் கொடுப்ப தாகக் கூறி அவனை அழைத்து வந்தாய். நான் உன்னைவிட அதிக சம்பளம் அவனுக்குக் கொடுப்பதா கக் கூறி அவனை அழைத்துப் போனேன். வேலைக்காரர்கள் எங்கு அதிகச் சம்பளமும் வசதிகளும் கிடைக்குமோ அங்கேதான் வேலை செய்யப் போவார்கள். உன் போன்ற கஞ்சப் பேர்வழிகளிடம் யார் தான் தொடர்ந்து வேலை செய்வார் கள்?" என்ருன்.

இதனுல் பொன்னுசாமிக்கும் சின்னசாமிக்கும் பலத்த வாக்கு வாதம் ஏற்பட்டு பெரிய சண்டை வரை போய் விட்டது. அங்கு கூடியவர்கள் அவர்களை விலக்கி விட்டார்கள். பரமானந்தம் அந்த சண்டையை பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்!.

இதை எல்லாம் கவனித்து வந்த வேலனுக்கு மனதில் ஒரு கொந்



தளிப்பே ஏற்பட்டது. அவன் அதுபற்றி ஆழ்ந்து யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். அதன்படி அவன் ஒருநாள் இரவில் ஒரு கடிதத்தை எழுதி அதனை அவ்வூர் மணியகாரரர் வீட்டு சன்னல் வழியாக உள்ளே போட்டு விட்டு அவ்வூரை விட்டே அவன் போய் விட்டான்.

மறுநாள் மணியகாரரர் தன் வீட்டினுள் ஒரு கடிதம் கிடப்பதைக் கண்டு அதனை எடுத்துப் படித்துப் பார்த்தார். அன்று மாலை அவர் ஊர்ப் பிரமுகர்களைக் கூட்டி ''வேலன் ஒரு கடிதம் எழுதி என் வீட்டில் போட்டு விட்டுப் போயிருக்கிறான். அதைப் படிக்கிறேன். கேளுங்கள்'' என்று கூறிக் கடிதத்தை உரக்கப் படித்தார்.

''இந்த கிராமத்தவர் அனைவருக்கும் என் வணக்கம். என் தாய் தந்தையர் இறந்தபின் அனாதையான என்னை நீங்கள் ஆதரித்து சாப்பாடு போட்டு வளர்த்ததற்கு மிக்க நன்றி. ஆனால் இப்போதுள்ள நிலையைப் பார்த்தால் இவ்வூரார் என் காரணமாகத் தமக்குள் சண்டைப் போட்டுக் கொண்டு கொலை வரைப் போய்விடுவார்கள் போலிருக்கிறது. இதைத் தவிர்க்கவே நான் யாருக்கும் சொல்லாமல் இரவோடு இரவாக இந்த ஊரை விட்டே போகிறேன்.''

மணியகாரரர் அதைப் படித்து விட்டு ''வேலன் எழுதியது சரியே. அவன் இந்த ஊரில் இருந்திருந்தால் இவ்வூர் பணக்காரரர்கள் ஒருவரையொருவர் அடித்துக் குத்திக் கொலை செய்திருப்பார்கள். வேலன் நம்மை எல்லோரையும்விட உயர்ந்தவன். எவ்வளவு புத்திசாலித்தனமாய் பிரச்னையை வளர விடாமல் முடித்து விட்டான் பாருங்கள்'' என்றார்.

பரமானந்தமும் சின்னசாமியும் பொன்னுசாமியும் ஒருவரை ஒருவர் பார்த்துத் தலைகுனிந்து கொண்டார்கள்.





# வீர ஹனுமான்

அனுமார் தான் மற்ற வானரர்களை விட சட்டென ஒரு வேலையைச் செய்து முடிக்கும் சக்தியும் திறமையும் பெற்றவர் என்ற காரணத்தால் சுக்கிரீவன் அவரிடம் கூறலானான்:

"மாபெரும் வீரரே! அனுமாரே! நீங்கள் காற்றிலும் நீரிலும், தரையிலும் ஆகாயத்திலும் வாயுதேவனை விட வேகமாகச் செல்லும் சக்தி படைத்தவர். நீங்கள் அறியாத உலகம் இல்லை. கடல் இல்லை. மலை இல்லை. பூவுலகில் உம்மைவிட சக்தி வாய்ந்தவர் யாருமே இல்லை. எனவே சீதா தேவியை தேடிக் கண்டு பிடிக்க உம்மால்தான் முடியும். உம்மிடம் இதற்கான எல்லாத் தகுதிகளும் உள்ளன. வேறு யாராலும் உங்களுக்குச் சமமாகச் செயல்பட முடியாதுதான்."

சுக்கிரீவன் அனுமாரிடம் இவ்வாறு கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த இராமர் முழுப் பொறுப்பையும் அனுமாரிடம் அவன் ஒப்படைத்து விட்டான் எனப்புரிந்து கொண்டார். அனுமாரைப் பற்றி சுக்கிரீவன் நன்கு அறிந்தவன் எனவே அவனது முடிவு சரியானதே என எண்ணி இராமர் தன் கை விரல் மோதிரத்தைக் கழற்றி அனுமாரிடம் கொடுத்து "வானரசிரேஷ்டனே! இந்த மோதிரத்தை சீதா தேவி பார்த்தால் உம்மைக் கண்டு பயப்படமாட்டாள். சந்தேகிக்கவும் மாட்டாள். உம்மை நான் அனுப்பியுள்ளதாகத் தெரிந்து

-சுயம்பிரபாவின் கதை-



கொள்வாள். உம்மால் சீதையைக் கண்டு வரமுடியும் என நானும் சுக்கிரீவனைப் போல நம்புகிறேன்'' என்றார்.

அனுமார் இராமர் தந்த மோதிரத்தை பக்தி சிரத்தையுடன் வாங்கித் தன் கண்களில் ஒத்திக் கொண்டார். அவர் இராமரை விழுந்து வணங்கி விட்டு விடை பெற்றுக் கொண்டார்.

வானரர்கள் நான்கு திசைகளிலும் சென்றனர். அவர்களுக்கு ஒரு மாதகாலமே அவகாசம் அளிக்கப் பட்டது. அவர்கள் சென்றபின் இராமரும் இலட்சுமணனும் பிரஸ்ரவண மலைக்குப் போய் அங்குள்ள குகைகளில் தங்கினார்கள். வானரர்கள் எப்போது திரும்பி வருவார்கள் என்று அவர்கள் எதிர்பார்க்கலானார்கள்.

வினதன் தன் வானரர்களுடன் கிழக்கு திசையிலும், சுஷேனன் மேற்கு திக்கிலும், சிலர் வானரர்கள் வட திசையிலும் சென்றார்கள். அனுமார், அங்கதன் ஜாம்பவான் முதலானோர் பல வானரர்களுடன் தென் திசையில் சென்றார்கள் இவ்வாறு வானரர்களை அனுப்பிய பின் சுக்கிரீவன் தான் மேற்கொண்ட முயற்சி பற்றித் திருப்தி அடைந்தவனாய் முன்போல சுக போகங்களில் ஈடுபட்டான்.

சீதையைத் தேடிச் சென்ற வானரர்கள் மிகுந்த ஈடுபாட்டுடன் தேடிப் பார்த்தார்கள். அவர்கள் பகலெல்லாம் தேடிவிட்டு இரவில் ஓரிடத்தில் கூடி இளைப்பாறினார்கள். இவ்வாறு வடக்கு, கிழக்கு மேற்கு திசைகளில் சென்ற வானரர்கள் ஒரு மாதகால முடிவில் திரும்பி வந்து சீதாதேவியைத் தாம் சென்ற திசைகளில் எங்கும் காணமுடியவில்லை என்று கூறினார்கள். தென் திசையில் சென்றவர்கள் இன்னமும் வராததால் இராமருக்கும் சுக்கிரீவனுக்கும் இன்னமும் நம்பிக்கை இருந்தது. ஏனெனில் இராவணன் சீதையைக் கவர்ந்து கொண்டு தென் திசையில்தானே சென்றான்!

தென்திசையில் சென்ற அனுமாரும் மற்ற வானரர்களும் விந்திய மலையை அடைந்தார்கள். அந்தப்

பரந்த பகுதியில் பலகுகைகளும் காடுகளும், மலைகளும், ஆறுகளும் இருந்தன. உயரமான மரங்களி லிருந்து தின்னப் பழங்கள் அவர் களுக்குக் கிடைத்தன. கிழங்குகளை பூமியிலிருந்து தோண்டி எடுத்து அவர்கள் புசித்தார்கள். அங்கு பகுதி பகுதியாக அவர்கள் சீதாதேவியைத் தேடியவாறே சென்றார்கள்.

அவர்கள் முற்றிலும் பொட்டலான ஒரு பகுதியைக் கண்ட போது ஆச்சரியப்பட்டார்கள். அங்கு மரங் கள் உலர்ந்து கிடந்தன. தண்ணீர் எங்குமே தென்படவில்லை. எந்த வகையான மிருகமோ பறவையோ அங்கு தென்படவில்லை. மயான அமைதி கொண்டு பயங்கரமாக அது விளங்கியது.

அங்கு கண்டு மகரிஷி என்பவர் இருந்தார். அவர் தவவலிமை பெற்றவராயினும் முன் கோபக் காரரர். அவர்தம் பதினாறு வயது மகன் திடீரென இறந்தான் என்ற காரணத்தால் கோபம் கொண்டு அப் பகுதியே பொட்டலாகிப் போகும் படி சபித்தார். வானரர்கள் இந் தப் பொட்டல் நிலத்திலும் சீதை யைத் தேடிப்பார்த்தார்கள்.

அவர்கள் அப்பகுதியைக் கடந்து அடர்ந்த ஒரு காட்டிற்குள் சென் றார்கள். அங்கு அவர்கள் ஒரு பயங்கர ராட்சஸனைக் கண்டார் கள். வானரர்கள் அவனைத் தாக்கத் தயாரானார்கள். ராட்சஸனும்



அவர்களை எல்லாம் ஒரேயடியாக விழுங்கப் போவதாகக் கத்திக் கொண்டு வந்தான். அங்கதன் அவனை இராவணன் என நினைத்து அவன் தலைமீது ஓங்கி அடித்தான். அந்த அடிதாளமுடியாமல் அந்த ராட்சஸன் ரத்தத்தைக் கக்கிய வாறே கீழே விழுந்து உயிரை விட்டான்.

இராவணன் இறந்து விட்டான் என்றும் சீதை அவனது குகைக்குள் இருப்பாள் என எண்ணி வானரர் கள் அந்த ராட்சஸனின் குகைக் குள் போய்த் தேடிப் பார்த்தார் கள். அங்கு சீதை தென்படவில்லை. அந்த குகைக்கு வெளியேயும் சுற்றி லும் தேடிப் பார்த்து விட்டு வானரர் கள் களைத்துப் போய் ஒரு மரத்தின்



கீழ் உட்கார்ந்தார்கள்.

அப்போது அங்கதன் "இந்த ராட்சஸன் இராவணன் அல்ல. நாம் இவ்வளவு நாட்களாக எல்லா இடங்களில் தேடியும் சீதை தென் படவில்லை சுக்கிரீவ மன்னனின் கட்டளைப்படி நாம் எப்படியும் ஒரு மாதத்திற்குள் கண்டு பிடித்தாக வேண்டும். நாம் நம் முயற்சியில் தளர்ந்து விடவில்லை. அலட்சிய மாயும் இருக்கவில்லை. எனவே இந்த இடம் முழுவதையும் இன்னெரு முறை அலசிப்பார்த்து விடுவோம்" என்ருன்.

கந்தமாதனனும் அங்கதன் கூறியபடியே செய்ய வேண்டும் என்ருன். வானரர்கள் உடனேயே மீண்டும் அப்பகுதி முழுவதும் தெடிப் பார்த்தார்கள். அவர்கள் வெள்ளி மலை போல இருந்த ஒரு மலையின் உச்சிமீது ஏறிப் பார்த்தார்கள். அங்கும் சீதை இருக்கவில்லை. அங் கிருந்து கீழே இறங்கி வேறு இடங் களில் தேடிப் பார்த்தார்கள். இப் படியாக விந்திய மலைப்பகுதி முழு வதையும் அவர்கள் தேடிப்பார்த்து விட்டார்கள். அப்போது அவர்களுக் குக் கொடுக்கப்பட்ட ஒரு மாத அவகாசமும் தீர்ந்து விட்டது.

இப்படியே அவர்கள் விந்திய மலைப்பகுதியைத் தேடிக்கொண்டு அதன் வடமேற்கு எல்லையை அடைந் தார்கள். அங்கு சேர்ந்த வானரப் பிரமுகர்கள் அனுமார், அங்க தன், கஜன், கவாட்சன், கவயன், மைந்தன், துவிதீயன், சரபன், கந்தமாதனன், நளன், நீலன், ஜாம் பவான் முதலானேர் ஆவர். அவர் கள் எல்லா இடங்களிலும் நன்கு தேடிவிட்டு முடிவில் ஒரு பொந்து இருக்கும் இடத்தை அடைந்தார் கள். அது ஒரு கரடி வசிக்கும் பொந்து போலத் தெரிந்தது.

அந்தப் பொந்தை தேவலோக சிற்பி மயன் நிர்மாணித்தான். அதைச் சுற்றிலும் கொடிகள் வளர்ந்து படர்ந்திருந்தன. அதனுல் அந்தப் பொந்தினுள் நுழைவது மிகவும் சிரமமாய் இருந்தது. வானரர் களுக்கோ ஒரே பசியும் தாகமு மாய் இருந்தது. அந்தப் பகுதியில் எங்கும் ஒரு நீர்நிலை கூடத் தென்

படவில்லை. வானரர்களும் மிகவும் களைத்துப் போயிருந்தார்கள்

அப்போது அந்தப் பொந்திலிருந்து அன்னம், சக்கிரவாகம், கிரௌஞ்சம் போன்ற நீர்ப்பறவைகள், பறந்து வெளியே வருவதை அவர்கள் பார்த்தார்கள். அவர்கள் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். அப்போது அனுமார் "இந்தப் பொந்திலிருந்து இந்த நீர்ப்பறவைகள் வந்ததால் இதற்குக் கீழ் ஏதாவது ஒரு நீர்நிலை இருக்கத்தான் வேண்டும். இப்போது எல்லோருக்கும் தாகம் எடுத்திருப்பதால் நாம் இப்பொந்தின் வழியாக உள்ளே போய்ப் பார்ப்போம்" என்றார்.

அவ்வளவுதான்! எல்லா வானரர்களும் அந்தப் பொந்தினுள் நுழைந்து சென்றார்கள். அதிலிருந்து மைஇருட்டான குகைக்குள் அவர்கள் நெடுந்தூரம் சென்றார்கள். முடிவில் அவர்கள் ஒளிமயமான அழகிய இடத்தை அடைந்தார்கள்.

அங்கு பளபளவென மின்னும் தங்க மரங்களும், பனை, தென்னை போன்ற மரங்களும் காய்களும் பழங்களும், மலர்களும் இருக்க அவை மின்னிக் கொண்டும் இருந்தன. அங்கு ஒரு தாமரைத் தடாகத்தில் தங்கத்தாமரைகளும் தங்க மீன்களும், தங்க ஆமைகளும் நிறைய இருந்தன.

அங்கு ஒரு அழகிய வீடும் இருந்தது. அதன் சன்னல்கள் தங்கத்தால் ஆனவை. வீட்டின் கூரை தங்க வெள்ளி ஓடுகளால் வேயப்





பட்டிருந்தது. வீட்டுவாசலில் முத்துத் தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. நவரத்தினங்கள் தொங்க அவை மின்னிக் கண்களைப் பறித்தன. மேலும் அங்கு தங்க ஆசனங்களை அவர்கள் பார்த்தார்கள். அவற்றில் வைரம், வைடூரியம் புஷ்பராகம் கோமேதகம், பச்சை, நீலம் போன்ற விலையுயர்ந்த ரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தன. கட்டில்களிலும் வாகனங்களிலும் இது போலவே நவரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தன. ஆங்காங்கு தங்க, வெள்ளிப் பாத்திரங்கள் அழகாக வைக்கப்பட்டிருந்தன. சந்தனம் கஸ்தூரி போன்ற வாசனை திரவியங்களும் பழங்களும் கிழங்குகளும் குவியல்களாக இருந்தன. குடிக்கப் பலவித பானங்களும், தேனும் இருந்தன.

வானரர்கள் அப்பகுதியைச் சுற்றிப் பார்த்து வந்த போது ஓரிடத்தில் பெண் ஒருத்தியைக் கண்டார்கள். அவள் மான்தோலை உடுத்திக் கொண்டு தவம் செய்து கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிலும் ஒளிவீசவே வானரர்கள் பயமும் ஆச்சரியமும் அடைந்து அப்படியே நின்றார்கள்.

அனுமார் அவளிடம் "அம்மணீ! தாங்கள் யாரோ? இந்தப் பிரதேசம் யாருடையது?" என்று கேட்டு கை கூப்பி வணங்கினர். பிறகு அவர் "நாங்கள் காட்டு வழியே வந்தபோது ஒரு பொந்தைப் பார்த்து அதில் நுழைந்தோம். அதன் வழியாக நடந்து இங்கு வந்து சேர்ந்தோம். எங்களுக்கு ஒரே பசியும் தாகமும் எடுக்கவே ஏதாவது கிடைக்குமா என்று பார்க்கவே இங்கு வந்தோம். ஆனல் இங்குள்ள பொருள்களை எல்லாம் பார்த்தால் ஏதோ ராட்சஸ மாயையோ என்று சந்தேகம் ஏற்படுகிறது. தங்க மரம் தங்க ஓட்டு வீடு இவை எல்லாம் யாருடையவை? அந்தக் குளத்திலுள்ள தங்கத் தாமரைகளை யார் சிருஷ்டித்தார்கள்? தங்க மீன்கள், தங்க ஆமைகள், இவைகளெல்லாம் யார் செய்தவை? இவற்றைப் பார்க்கப் பார்க்க எங்களுக்குக் குழப்பமே ஏற்படுகிறது. சற்று விவர

மாகச் சொல்வீர்களா? என்று கேட்டார்.

அந்தப் பெண்மணியும் கூறலானுள்: ''மயன் என்ற அரிய தேவலோக வாசி இங்கு வாழ்ந்து வந்தான். அவன் தன் மாயா சக்தியால் இந்தத் தங்கத்தடாகம் தங்க மரம் முதலியவற்றை உண்டாக்கினுன். பிரம்மாவைக் குறித்து அவன் தவம் செய்து வரம் பெற்று நிறையப் பணமும் அடைந்தான். அவன் ஹேமா என்ற அப்சரப் பெண்ணேடு இங்கு சுகமாகக் காலம் கழித்து வந்தான். இந்திரன் அவன் மீது கோபம் கொண்டு தன் வச்சிராயுதத்தால் அடித்து வீழ்த்தினுன். அப்போது பிரம்மா இந்தப் பகுதியை ஹேமாவுக்கு அளித்தார். நான் மேடு சாபர்னியின் புதல்வி சுயம்பிரபா, ஹேமாவின் விருப்பப்படி இப்பகுதியை நான் காவல் காத்து வருகிறேன். அவள் இசையிலும் நாட்டியத்திலும் தலை சிறந்தவள். அவள் எனக்கு அளித்துள்ள வரத்தால் யாரும் என்னை வெல்ல முடியாத சக்தியும் பெற்றிருக்கிறேன். யாவரும் வர முடியாத இந்த இடத்திற்கு எப்படி வந்தீர்கள்? முதலில் நீங்கள் எல்லோரும் பழம், கிழங்குகளைச் சாப்பிட்டுத் தண்ணீர் குடியுங்கள். பிறகு பேசலாம்'' என்ருள்.

அனுமாரும் அவள் கூறியபடி செய்து பிறகு தாம் மேற்கொண்ட பணியைக் கூறினுர். அவர் அவளிடம் ''எங்களுக்கு உணவு கொடுத்து தாகம் தீர்த்ததற்கு மிக்க நன்றி. இதற்கு பதிலாக நாங்கள் என்ன



செய்ய வேண்டும் என்று கூறுங்கள். செய்து முடிக்கிறோம்'' என்றார்.

சுயம்பிரபாவும் ''ரொம்ப சந்தோஷம், ஆனால் பதில் உபகாரமாக எனக்கு நீங்கள் எதுவும் செய்ய வேண்டாம்'' என்றாள். அப்போது அனுமார் ''அம்மணீ! எங்கள் மன்னர் கொடுத்த ஒரு மாத காலம் முடிவடைந்து விட்டது. நாங்கள் இங்கிருந்து விரைவில் வெளியே போகச் செய்யுங்கள். நாங்கள் சீதாதேவியைத் தேடிக் கண்டுபிடித்தாக வேண்டும்'' என்றார்.

அது கேட்டு சுயம்பிரபாவும் ''நீங்கள் எல்லோரும் கண்களை மூடிக் கொள்ளுங்கள். என் சக்தியால் உங்களை இங்கிருந்து ஒரு நொடியில் வெளியே போகச் செய்கிறேன்'' என்றாள். எல்லா வானரர்களும் கண்களை மூடிக் கொள்ள மறு விநாடியே அவர்கள் அப்பொந்தின் வாயிலருகே வந்து விட்டார்கள்.

சுயம் பிரபாவும் அங்கு வந்து ''இது விந்தியமலை. அதோ தெரிவது கடல். உங்கள் முயற்சி வெற்றி பெறட்டும்'' எனக் கூறிவிட்டுத் தன் இருப்பிடத்திற்குச் சென்றாள்.

வானரர்கள் வெளியே வந்ததும் மேற்கொண்டு என்ன செய்வது என்று யோசிக்கலானார்கள். அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு மாத கெடு தீர்ந்து விட்டது. ஆயினும் சீதா தேவியைத் தேடிக் கண்டுபிடிக்க முடியவில்லை. மலைகளிலும் குகைகளிலும் காடுகளிலும் தேடிப் பார்த்தாகி விட்டது. இனி கடல் கடந்து போய்த்தான் தேட வேண்டும்.

கடலைக் கடப்பது எளிதல்லவே. அப்படிக் கடந்தாலும் எந்தத் தீவு என்று போய்த் தேடுவது? கொஞ்சமாவது, தடயம் கிடைத்தால் அதை வைத்துக் கொண்டு தேடலாம். ஆனால் எதுவுமே கிடைக்கவில்லையே. இப்படியாக அவர்கள் யோசனையில் மூழ்கினார்கள்.





# உண்மையான சொத்து

பொன்னுசாமி ஏழை விவசாயி யாக வாழ்க்கையை ஆரம்பித்து உழைத்து பணம் சேர்த்துப் பணக் காரன் ஆனவன். அவனுடைய ஒரே மகள் மீனாட்சி. அவள் சிறு வயதிலிருந்தே அடக்கத்துடனும் பெரியவர்களிடம் மரியாதை காட்டி யும் கல்வி பயின்று எல்லோரு டைய பாராட்டுதலையும் பெற்றும் வந்தாள்.

மீனாட்சி வளர்ந்து பெரியவ ளானதும் அவளது திருமணம் பற் றிய பேச்சு எழுந்தது. பொன்னுசாமி தன் மகளை ஏழைக்குக் கொடுக்க முடியாதென்றும் மிகுந்த வசதி யும் செழுமையுமான குடும்பத்த வனுக்கே கொடுக்கப் போவதாகக் கூறி வந்தான்.

இதை அறிந்த அடுத்த ஊர் லட்சாதிபதி லட்சுமணன் மீனாட் சியை மணக்க விரும்பினான். தான் வசதி மிக்கவன் என்றும் பெரும் பணக்காரன் என்றும் மிகவும் கர் வம் கொண்டிருந்தான். அதனால் அவன் கல்யாணத் தரகன் கனக ரத்தினத்தை அழைத்து "நீ மட்டும் பொன்னுசாமியிடம் பேசி எனக்கு மீனாட்சியைக் கொடுக்க அவனைச் சம்மதிக்க வைத்தால் உனக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன். நான் வரதட்சணையாக ஒரு லட்சம் ரூபாய்தான் கேட்கிறேன் என்பதை யும் பொன்னுசாமியிடம் தெரிவி" என்றான்.

தரகனும் பொன்னுசாமியைக் கண்டு "லட்சுமணன் லட்சாதிபதி. அவன் வரதட்சணையாக அதிகம் எதிர்பார்க்கவில்லை. ஒரு லட்சம் ரூபாய்தான் கேட்கிறான். உன் மகளை தாராளமாக அவனுக்குக் கொடுக்கலாமே" என்றான்.

அதற்கு பொன்னுசாமி "நான்

-பரத் வெங்கடராமன்-

தான் முன்பே சொல்லி இருக்கிறேனே. என் மகளை ஒரு ஏழைக்குக் கொடுக்க மாட்டேன் என்று. அது புரியவில்லையா உனக்கு?'' என்று கேட்டான்.

தரகன் திடுக்கிட்டு ''அப்படியானல் லட்சுமணனை ஏழை என்ரு நீ சொல்கிருய்? லட்சாதிபதியான லட்சுமணனை ஏழை என்று கூறி இப்படி மட்டம் தட்ட வேண்டாம்'' என்ருன் சற்று கோபமாக. பொன்னுசாமி அதற்கு பதில் கூற வில்லை.

லட்சுமணனை விடப் பெரிய பணக்கார வீட்டின் சம்பந்தம் வேருெரு தரகன் தங்கசாமியின் வழியாக வந்தது. அந்த பணக்காரனின் பெயர் கோபாலசாமி. அவன் கோடீஸ்வரன். பொன்னுசாமி லட்சுமணனுக்கு அளித்த பதில் அவனுக்குத் தெரிந்திருந்தது. அதனுல் தங்கசாமியிடம் அவன் ''நான் மீனுட்சியை மணக்க விரும்புகிறேன். என்னைப் பற்றி விவரமாக அவனிடம் சொல். எனக்கு வரதட்சணையாக ஐம்பதாயிரம் ரூபாய் கொடுத்தால் போதும் என்றும் சொல்லிப் பேசி முடி'' என்று கூறி அனுப்பி இருந்தான்.

தங்கசாமியும் பொன்னுசாமியிடம் ''கோபாலசாமி கோடீஸ்வரன். வரதட்சணையாக ஐம்பதாயிரம் ரூபாய் மட்டுமே கேட்கிருன். இது நல்ல இடம். நழுவ விட்டு விடாதே'' என்ருன். பொன்னுசாமியோ முன் வந்த கனகரத்தினத்திற்குச் சொன்ன பதிலையே தங்கசாமியிடமும் கூறினுன்.



அதைக் கேட்ட தங்கசாமி ஆத்திரப்பட்டு "உன் மகளுக்கு மகாராஜாவா மாப்பிள்ளையாக வரப் போகிறுன்? இப்படியே நீ நல்ல சம்பந்தங்களை வேண்டாம் என்று சொல்லிக் கொண்டே போனுல் உன் பெண்ணிற்குக் கல்யாணமே நடக்காது" என்று கூறிவிட்டுப் போனுன்.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு அதே ஊரில் உள்ள சிவசாமி என்பவன் பொன்னுசாமியைக் கண்டு "நான் உங்கள் மகள் மீனுட்சியை மணக்க விரும்புகிறேன். அவளுக்கும் என்னை மணந்து கொள்ள சம்மதம் என்பதனையும் தெரிந்து கொண்டேன். நீங்கள் ஒப்புக் கொண்டால் இந்தத் திருமணம் நடக்கும்" என்ருன்.

அப்போது பொன்னுசாமி "என்னிடம் ஐந்து லட்ச ரூபாய் ரொக்கமாக இருக்கிறது. கப்பல் போன்ற இந்த வீடும் இருபது ஏக்கர் நஞ்சை நிலமும் எனக்குச் சொந்தம். ஏகப்பட்ட நகைகள் உள்ளன. ஆனுல் இவை எல்லாம் என் மகளுக்கு நான் கொடுக்க மாட்டேன். வயதான காலத்தில் நான் சுகமாக இருக்க இவை எனக்கு வேண்டும். என் மகள் என் வீட்டில் எல்லா வசதிகளோடும் சுகமாக வாழ்ந்து வருபவள். இதே சுகத்தில் அவளை வாழச் செய்பவனுக்கே நான் அவளை கல்யாணம் செய்து வைப்பேன். உன் வசதி என்ன?" என்று கேட்டான்.

சிவசாமியும் "ஐயா! நான் நான்கு வருடங்களுக்கு முன் இந்த



ஊருக்கு வந்தேன். நான்கு கறவை மாடுகளை முதலில் வைத்துக் கொண்டு பால் வியாபாரம் ஆரம்பித்தேன். இப்போது என்னிடம் பதினாறு கறவை மாடுகள் உள்ளன. நான்கு ஏக்கர் நஞ்சை நிலமும் வாங்கி விட்டேன். கொஞ்சம் கடன் வாங்கி ஒரு வீட்டையும் கட்டி இருக்கிறேன். இன்னும் ஆறு மாத காலத்துள் அந்த கடனையும் அடைத்து விடுவேன். உங்கள் மகளைச் சுகமாக என் வீட்டில் இருக்கச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. வயது காலத்தில் உங்களுக்கு உங்கள் சொத்தும் பணமும் உதவும் என நீங்கள் நினைப்பதும் தவறு. அப்போது உங்களை செயலற்றவராக்கி எல்லோரும் உங்கள் சொத்தையும் பணத்தையும் அபகரித்துக் கொண்டு போய் விடுவார்கள். எனவே அவற்றை தர்ம காரியங்களுக்குப் பயன்படுத்தி விடுங்கள். பிறகு என் வீட்டிற்கு வந்து நீங்களும் சுகமாக இருக்கலாம்'' என்றான்.

பொன்னுசாமி மீனாட்சியை சிவசாமிக்கு மணம் செய்து வைத்தான். அது கண்டு தரகர்கள் கனகரத்தினமும் தங்கசாமியும் பொன்னுசாமியிடம் ''இந்த சிவசாமியா நாங்கள் கொண்டு வந்த வரன்களை விடப் பணக்காரன்?'' என்று கேட்டார்கள்.

பொன்னுசாமியும் ''ஆமாம். இவன் கை நீட்டி ஒரு பைசாகூட வரதட்சணை என்று கேட்கவில்லை. நீங்கள் சொன்னவர்களோ பிச்சைக்காரர்களைப் போல என்னிடம் வரதட்சணை என்று பணம் கேட்டார்கள். இப்படிப் பணம் கேட்பவர்கள் ஏழைகள்தானே. சிவசாமி எனக்கும் என் மகளுக்கும் சுக வாழ்வு கொடுக்கிறான். அதனால் அவன் பணக்காரன்'' என்றான்.

தரகர்கள் இருவரும் தலைகுனிந்து கொண்டார்கள்.






# வைரமாலை

ஒரு ஊரில் பரமன் என்ற வடி கட்டின கஞ்சன் இருந்தான். அவனிடம் ஏராளமாகப் பணம் இருந்தும் வசதியாக வாழாமல் ஏழை போல வாழ்ந்து பைசாவுக்கும் கணக்குப் பார்த்து வந்தான்.

ஒரு முறை அடுத்த வீட்டு அனந்தன் தன் மனைவிக்கு ஐயாயிரம் ரூபாயில் ஒரு வைரமாலை வாங்கிக் கொடுக்கவே அவள் அதை அணிந்து கொண்டு அவ்வூர்ப் பெண்களிடம் எல்லாம் காட்டினாள். அந்த வைரமாலையைப் பார்த்தது முதல் பரமனின் மனைவி லட்சுமியும் தானும் அதே போல ஒரு மாலை வாங்கி அணிய வேண்டும் என்று ஆசைப்பட்டாள்.

அவள் தன் கணவனிடம் அது பற்றிக் கூறவே பரமனோ "இது வீண் செலவு. ஐயாயிரம் கொடுத்து வைரமாலை வாங்குவதற்கு பதில் அந்தப் பணத்தை வட்டிக்கு விட்டால் வட்டிப்பணமே நிறைய வருமே. வைரமாலை வட்டியா கொடுக்கும்?" என்று கூறித் தன் மனைவியின் பேச்சை ஏற்கவில்லை.

இரண்டு நாட்களுக்குப் பின் லட்சுமி அனந்தனின் மனைவியிடமிருந்து வைரமாலையை இரவல் வாங்கி அணிந்து கொண்டாள். அவள்தன் கழுத்தில் மாலை மின்னுவதைத் தன் கணவனிடம் காட்டி "பார்த்தீர்களா? எவ்வளவு அழகாக இருக்கிறேன்!" என்றாள்.

பரமனும் "நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இதை இரவல் வாங்கிப் போட்டுக் கொண்டாய். இது தொலைந்தோ திருடோ போய் விட்டால் நாம்தான் ஐயாயிரம் ரூபாய் அனந்தனுக்குக் கொடுக்க வேண்டிவரும். இதை இப்போதே கொண்டு போய்க் கொடுத்து

-எஸ். சோபினி-

விடு'' என்றான்.

லட்சுமியோ "இன்று ஒரு நாளைக்கு இரவலாக வாங்கி வந்தேன். நாளைக் காலையில் கொடுத்து விடுகிறேன்'' என்றாள். அன்றிரவு கழிந்தது. மறுநாள் காலை லட்சுமி எழுந்து தன் கணவனிடம் "நேற்றிரவு நீங்கள் கொல்லைக் கதவை சாத்தித் தாழ்ப்பாள் போடவில்லையா? அது திறந்து கிடக்கிறதே வைரமாலை காணவில்லையே. திருட்டுப் போய் விட்டதே. எல்லாம் நீங்கள் கொல்லைக் கதவைச் சரியாக மூடாததால் வந்தவினை'' என்று கதறினாள்.

பரமனும் "நான் சரியாகத் தான் மூடியதாக ஞாபகம். சரி. ஐயாயிரம் ரூபாய் தண்டம். என்ன செய்வது? வேறு வழியில்லை. அடுத்த வீட்டுக்காரனுக்கு அதே விலைக்கு அதே போல ஒரு மாலையை வாங்கிக் கொடுத்து விடலாம்'' என்று பெருமுச்சுவிட்டவாறே கூறினான்.

அன்று மத்தியானமே பரமன் ஒரு வைரமாலையை வாங்கி வந்து லட்சுமியிடம் கொடுத்து "இதை இப்போதே அடுத்த வீட்டில் கொடுத்து விட்டுவா'' என்றான். லட்சுமியோ அதை வாங்கித்தன் கழுத்தில் போட்டுக் கொண்டு சிரித்தவாறே "இதை அடுத்த வீட்டில் கொடுக்க வேண்டாம். இது நம்முடையதே. நீங்கள் மாலை வாங்கப் போன பிறகு நன்கு தேடிப் பார்த்தேன். அந்த மாலையை பெருங்காயடப்பாக்குள் போட்டு வைத்திருந்தது நினைவுக்கு வந்தது. அதை எடுத்துப் போய் அப்போதே அடுத்த வீட்டில் கொடுத்து விட்டேன்'' என்றாள்.

லட்சுமி இப்படி ஒரு நொடியில் ஏமாற்றி சாமர்த்தியமாக வைரமாலையை வாங்கச் செய்து விட்டாளே என நினைத்து அவன் திகைத்து நின்றான்.



# தாத்தா அதிர்ஷ்டசாலி!

காலூர் கிருஷ்ணன் தான் ஏதாவது ஒரு வேலையைத் தொடங்கும் போது யாராவது தும்மினால் அதை ஒரு கெட்ட சகுனமாக எண்ணுவான். அவனது தந்தை நாராயணன் "'கிருஷ்ணா' உன்னை விட மிக வயதான நானே இந்த சகுனம் பற்றி அவ்வளவாகச் சட்டை செய்யாத போது நீ ஏன் இப்படி நம்புகிறாய்?" என்று சொல்லிப் பார்த்தான். ஆனால் அவன் கேட்டகவில்லை.

ஒருமுறை கிருஷ்ணன் ஏதோ ஒரு வேலையாக அடுத்த ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருந்தான் அப்போது அவனது மகன் பிரகாஷ் 'அசுக்'கென்று தும்மினான். கிருஷ்ணனோ உடனே நின்று "என்னடா இப்போது பார்த்தா தும்ம வேண்டும்?" என்றான் பிரகாஷும் "நான் தும்மினால் என்ன? நீங்கள் பாட்டிற்கு உங்கள் வேலையைப் பார்க்கப் போவது தானே" என்றான்.

கிருஷ்ணனோ "தும்மல் அபசகுனம் ஒரு வேலைக்குப் போகும் போது யாராவது தும்மினால் அது உருப்படாது" என்றான். பிரகாஷும் "நான் தும்மிய இதே நேரத்தில் இந்த ஊரில் எவ்வளவோ பேர்கள் தும்மி இருப்பார்களே. அதனால் சகுனத்தடை இல்லையா?" என்று கேட்டான்.

கிருஷ்ணனும் "அதையெல்லாம் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது. நாம் கேட்கும் தும்மலே அபசகுனத்தின் அறிகுறி" என்றான். அப்போது பிரகாஷ் "அப்படியானால் தாத்தாதான் அதிர்ஷ்டசாலி அவர் டமாரச் செவிடு. யார் தும்மினாலும் அவர் காதில் விழாது அதனால் சகுனம் பற்றி கவலைப்படாமல் அவர்தம் வேலைகளைச் செய்யலாம். உங்களால் அப்படி முடியாது. ஒரு தும்மல் உங்களை வேலை செய்யவிடாமல் தடுத்து விடும்" என்றான்.

கிருஷ்ணனும் பதில் பேச முடியவில்லை இதற்குப் பின் அவன் தும்மலை அபசகுணமாக நினைக்கவில்லை.





# உனக்கா தண்டனை!

சீனாவில் ஒரு நகரில் ஹ்யூங் என்ற பணக்காரன் இருந்தான். அவன் மிகவும் கொடியவன். தன்னிடம் பணம் இருக்கிறது என்ற திமிரில் அவன் எல்லோரையும் துன்புறுத்தி வந்தான். அவனைக் கண்டு எல்லோரும் பயந்து நடுங்கினார்கள்.

ஆனால் அதே ஊரில் இருந்த வாங் என்பவன் நல்லவன். தைரிய சாலி. அவன் ஹ்யூங் செய்யும் அக்கிரமங்களைக் கண்டு மனம் பொறுக்காமல் ஒருநாள் அந்நாட்டு மன்னனிடம் போய் ஹ்யூங்கைப் பற்றி புகார் செய்தான். மன்னனோ அவன் ஹ்யூங்கின் மீது எதற்கோ பொறாமை கொண்டு அவ்வாறு புகார் செய்வதாகக் கூறி அவனது புகார் மனுவைத் தள்ளி விட்டான்.

இதனால் வாங்க் மனமுடைந்து போய்த் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். அப்போது ஹ்யூங் தெருவில் வயதான கிழவியைச் சவுக்கால் அடித்துக் கொண்டிருந்தான்: இருபத்தி நான்கு... இருபத்தைந்து என்று உற்சாகத்தோடு அடித்தவாறே அவன் எண்ணிக் கொண்டும் இருந்தான்.

இதைக் கண்ட வாங்கிற்குக் கோபம் வந்தது. அவன் ஆத்திரப்பட்டு அங்கே கிடந்த ஒரு சம்மட்டியை எடுத்து ஹ்யூங்கை ஓங்கி அடித்தான். அந்த ஒரே அடியில் ஹ்யூங் விழுந்து இறந்து போனான்.

வாங் என்னவோ ஹ்யூங்கைக் கொல்ல நினைக்கவில்லை. ஆனால் உணர்ச்சி வசப்பட்டு அப்படிச் செய்து விட்டான். அவன் உடனேயே போய் மன்னனைக் கண்டு "அரசே! நான் ஹ்யூங்கைக் கொன்று விட்டேன். எனக்கு என்ன தண்டனை கொடுக்க வேண்டுமோ அதைக் கொடுங்கள். ஏற்றுக் கொள்கிறேன்"

-சீனப் பழங்காலக் கதை-

என்றான். மன்னன் அவனுக்கு மரண தண்டனை விதித்தான்.

அந்த தண்டனை நிறைவேறுவதற்கு இரண்டு நாட்கள் இருக்கையில் வாங்கின் நண்பர்கள் சிலர் மன்னனைக் கண்டு "அரசே! வாங் மிகவும் நல்லவன். இறந்து போன ஹ்யூங் மிகவும் கொடியவன். அவன் செய்த கொடுமையைக் காணச் சகியாமலேயே வாங் அவனைத் தாக்கினான். எனவே வாங்கை மன்னித்து விடுதலை செய்யுங்கள்" என்று வேண்டினார்கள்.

ஆனால் மன்னன் அவர்களது வேண்டுகோளை ஏற்கவில்லை. எனவே அவர்கள் தர்பாரிலிருந்து போகும்போது பதிநான்கு வயதுச் சிறுவன் ஒருவன் ஓடி அங்கு வந்தான். அவன் மன்னனின் கால்களில் விழுந்து வணங்கி "அரசே! வாங்கிற்கு பதிலாக நான் மரண தண்டனையை ஏற்கிறேன். அவனை விடுதலை செய்து என்னைத் தூக்கில் போடுங்கள்" என்று கெஞ்சினான்.

அதைக் கேட்ட மன்னன் ஆச்சரியப்பட்டு "யார் நீ?" என்று கேட்டான். அச்சிறுவனும் "அரசே! நான் வாங்கின் மூத்த மகன். என் தாய்க்கு நாங்கள் நான்கு புதல்வர்கள். நாங்கள் ஏழைகள். என் தந்தை இருந்து சம்பாதித்தால் என் குடும்பம் பிழைக்கும். நான் ஒரு மகன் போனாலும் என் தாய்க்கு மற்ற மூன்று பிள்ளைகள் இருக்கிறார்கள். ஆனால் என் தந்தை போய் விட்டால் எங்கள் குடும்பம் எப்படி உயிர் வாழ்வது?



அதனால் எனக்கு தண்டனை அளித்து என் தந்தையை விட்டு விடுங்கள்'' என்றான்.

இதைக் கேட்ட மன்னன் ''சரி, உன் தாயார்தான் இப்படி என்னிடம் வேண்டிக் கொள்ளும்படி சொல்லி அனுப்பினாளா?'' என்று கேட்டான். அதற்கு அச்சிறுவன் ''இல்லை அரசே! எந்தத் தாய் தான் தன் மகனை இழக்கச் சம்மதிப்பாள்? நான் அவளுக்குத் தெரியாமலும் அவளிடம் இது பற்றி எதுவும் சொல்லாமலும் வந்திருக்கிறேன். என் தந்தை உயிர் தப்புவது அவளுக்கு மகிழ்ச்சியாகவே இருந்தாலும் நான் இறப்பது அவளுக்கு துக்கத்தையே தான் அளிக்கும். எனவே அவளிடம் சொல்லவில்லை. நாளாக ஆக என்னைப் பற்றிய நினைவும் மறைந்து விடும் என்ற நம்பிக்கையில் நானே இங்கு வந்து இப்படி வேண்டினேன்'' என்றான்.

இது கேட்டு மன்னன் மனம் இளகியது. அவனும் ''சரி உன் வேண்டுகோளை ஏற்றேன்'' என்றான். அப்போது அச்சிறுவன் ''அப்படியானால் என்னை இப்போதே சிறைப்படுத்தி என் தந்தையை உடனே விட்டு விடுங்கள்'' என்றான்.

மன்னனும் ''உன் வேண்டுகோளை ஏற்றது உன் தந்தையைப் பொறுத்தவரைதான். அவன் தண்டனையை நீ ஏற்க நான் ஒப்பமாட்டேன். உன் மாதிரி மகனுக்குத் தண்டனையா? நீ நீண்ட காலம் வாழவேண்டும். உன் போன்ற நல்ல புதல்வனைப் பெற்ற உன் தந்தையும் நல்லவனே. அவனால் அக்கிரமத்தை சகிக்க முடியவில்லை. அதனால் அவன் ஹ்யூங்கைக் கொன்றது தெய்வமே ஹ்யூங்கிற்கு அவனது கொடிய செயல்களுக்காக வழங்கிய தண்டனை'' எனக் கூறி வாங்கை விடுதலை செய்து அனுப்பினான்.





## சூபர் சாரஸ்

அமெரிக்காவிலுள்ள கொலராடோவில் 1972-ல் ஒரு ராட்சஸப் பல்லியின் உடல் கண்டு பிடிக்கப்பட்டது. அதன் தோள்ப்பட்டை 8 அடி 10 அங்குலம் (2.69 மீ) நீளம். அதனுடைய விலா எலும்பு 10 அடி நீளம் (3 மீ) அந்த ராட்சஸப் பல்லியின் முழு நீளம் 90 அடி (27 மீ) இருக்கலாம் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. அதன் நிறை 140 டன்கள். இதற்கு சூபர்சாரஸ் என்று பெயர் வைத்திருக்கிறுர்கள்.

சிலந்தி போலுள்ள இந்த உயிரினத்தின் விஷம் மிகக் கொடியது. ஒரு மனிதனே அது கொல்லவல்லது. இதன் விஷம் பிரெய்கிரேடில் ஸ்நேக் என்ற பயங்கரப் பாம்பின் விஷத்தைப் போலப் பதினேந்து மடங்கு சக்தி வாய்ந்தது. 1950 லிருந்து 1959க்குள் அமெரிக்காவில் இதன் விஷக்கடியால் 83 பேர்கள் இறந்ததாகப் பதிவாகி உள்ளது.



ப்ளாக் விடோ

## நீண்டகாலம் வாழ்ந்த பறவை

நீண்ட காலம் உயிர் வாழ்ந்த பறவை ஆண்டியன் கோன்டோர் என்பதாம். இதில் ஒன்று மாஸ்கோ உயிரியல் அருங்காட்சியகத்தில் 72 ஆண்டுகள் உயிருடன் இருந்ததாம்.



# மங்கை

## இம்மாதம் படித்தீர்களா?




ஒவ்வொரு வரியும்
பெண்ணுலகுக்குப் பெருமையும்
உயர்வையும் தரும்
இணையற்ற இதழ்
**மங்கை**

இல்லற வாழ்வை
இனிமையாக்கும்
மகளிர் மாத இதழ்-
ஒவ்வொரு இல்லத்தரசியும்
தவறாமல் படித்து வரும் மாத இதழ்
**மங்கை**

ஒவ்வொரு வரியும் பெண்களுக்கு
வாழ வழி காட்டுகிறது;
ஒவ்வொரு பகுதியும்
இனிய இல்லறத்துக்கு உதவுகிறது
**மங்கை**

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்**



I. Umarani



K. Sitharam

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ பிப்ரவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### டிசம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : தளர்ந்து போன முதுமை

இரண்டாவது போட்டோ : தளிர் விடும் இளமை

பரிசு பெற்றவர் : உஷா மெர்சி, அறந்தாங்கி.

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.


## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 36–00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# Ta dum, They is here

**Oops!**
**Kiddy grammar sure is catchy—Ya, they are here.**

Bow Wow 'n' Floppy the doggies (wuff! wuff!), Jumbo the elephant, Wobbit the rabbit, Teddy 'n' Sporty your bear buddies, the mouse of your house —Squeeks, not to mention Flipper the dolphin 'n' Bunny with the Twins. They are all part of the CUDDLES family. And hang on—there's more to come.



The one thing we didn't do while making our toys was fool around. We left that entirely for your kid to do. Come, check us out.

What stuffing to use, what shape to give, which colour to use...... We've spent long months in designing and crafting the toys which can take on the toughest torture test ever—childhandling. To ensure that they're safe.

CUDDLES

CHANDAMAMA TOYTRONIX

in collaboration with Sam-no Corporation, S.Korea

Chandamama Buildings, 188, NSK Salai, Vadapalani, Madras-600 026.

# Vital tips for colouring




Luxor Bambino colour set
An adventure with colours.



Luxor Mickey Mouse Colours
Enter the fairyland of colours.




Luxor Colour Pens
Sing a rainbow, paint a song




Luxor Disney fun set
For fun, frolic and fantasy.




Disney Inoxcolor Plastic Crayons
Colourful times ahead.




Luxor Sign Pen
To make your little dreams come true.




Donald Duck Magic Colours
For the magician in you.

Bestsellers
PENNED BY LUXOR



# MORE THAN A MANGO!

nutrine

Naturo

MANGO FRUIT BAR

Product of India

FPO

6741

**NATURO FROM NUTRINE. A THICK JUICY MANGO BAR.**

**MADE FROM PURE MANGO PULP.**

**SWEETER AND SO MUCH MORE THAN JUST A MANGO.**




Mudra:Bir:NN:310:90